

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 13 கலசம் 156
Volume 13 Issue 156

ஜூலை 2019 ரூ. 25
July 2019 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



பூ.கொ. சரவணன்
டி. கண்ணன்
தர்மினி
நடேசன்
இமையம்
பொ. கருணாகரமூர்த்தி
புதிய மாதவி
ஸிந்துஜா
எம். ரிஷான் ஷெரீப்
அ. ராமசாமி
ப. தெய்வீகன்
விஜய ராவணன்
இளங்கோ
வண்ணநிலவன்
மார்டின் பட்லர்
ஷங்கர்ராமசுப்ரமணியன்

## மொழிக் கொல்லியாக இந்தி மாறிய வரலாறு

ரோஷன் கிஷோர்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200




Rs. 100



Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 13 கலசம் 156



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜூலை-2019 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்


06 மொழிக் கொல்லியாக இந்தி மாறிய வரலாறு
**ரோஷன் கிஷோர்; தமிழில்: பூ.கொ. சரவணன்**

10 கவிதை
**டி. கண்ணன்**

13 அன்புள்ள ஏவாளுக்கு
**தர்மினி**

16 கரையில் ஒதுங்கும் நினைவலைகள்
**நடேசன்**

20 சமூகம் எழுதிய கதைகள்
**இமையம்**

24 சிறுகதை
**பொ. கருணாகரமூர்த்தி**

37 சிறுகதை
**புதிய மாதவி**

42 எழுத்தாளர்களின் மறுபக்கம்
**ஸிந்துஜா**

46 கவிதை
**எம். ரிஷான் ஷெரீப்**

52 சிறுகதை
**விஜய ராவணன்**

59 அனுபவப் புனைவு
**இளங்கோ**

62 பின்நகர்ந்த காலம்
**வண்ணநிலவன்**

66 தேசியம் என்னும் கோரமுகம்
**மார்டின் பட்லர்**

# தண்ணீர் தட்டுப்பாடு காரணங்களும் தீர்வுகளும்

பிரபு திலக்

தமிழகம் முழுவதுமே, ஒருசில ஊர்கள் தவிர, எல்லா இடங்களிலும் பரவலாகத் தண்ணீர் தட்டுப்பாடு கடுமையாக நிலவுகிறது. குறிப்பாக தலைநகர் சென்னை மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது. எங்கெங்கும் காலி குடங்களும் தண்ணீர் லாரிகளுமே கண்ணில்படுகின்றன. தண்ணீர் இல்லாத காரணத்தால் பல உணவகங்கள் மதிய உணவை நிறுத்திவிட்டன, பல நிறுவனங்கள் விடுமுறை அறிவித்துள்ளன அல்லது ஊழியர்களை வீட்டிலிருந்தே வேலை செய்யுமாறு கேட்டுக்கொண்டுள்ளன. பள்ளிகள் பணி நேரத்தைக் குறைத்துள்ளன. மக்களின் அன்றாட வாழ்வே கேள்விக்குறியாகி உள்ளது.

உறவினர்கள், நண்பர்களை நீண்ட நாட்கள் இடைவெளிக்குப் பின்னர் சந்திக்கும்போது, "நலமாக இருக்கிறீர்களா?" என்று கேட்பது வழக்கம். ஆனால், இப்போது சென்னையில் இப்படிப்பட்ட சந்திப்புகளில், "உங்கள் வீட்டில், உங்கள் பகுதியில் தண்ணீர் பிரச்சினை இருக்கிறதா" என்றுதான் கேட்கப்படுகிறது. அந்த அளவுக்கு நிலைமை மோசமாகியுள்ளது.

இது திடீரென வந்த தட்டுப்பாடு இல்லை. கடந்த சில ஆண்டுகளாகவே படிப்படியாக தண்ணீர் வளம் குறைந்துகொண்டேதான் வருகிறது. இந்த ஆண்டு உச்சத்தை எட்டியுள்ளது. இனிவரும் ஆண்டுகளில் இன்னும் மோசமாகும் என்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை. விரைவில் சென்னை தண்ணீர் இல்லாத நகரமாகும் அபாயம் உள்ளதாக நிதி ஆயோக் அறிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

சென்னை மட்டுமின்றி கோவை, சேலம், மதுரை, புதுக்கோட்டை, தூத்துக்குடி உட்பட பல நகரங்களிலும்கூட தண்ணீர் தட்டுப்பாட்டால் மக்கள் கடும் சிரமங்களைச் சந்தித்து வருகிறார்கள். தண்ணீர் தட்டுப்பாடு காரணமாக விலையும் அதிகமாகி இருக்கிறது. பல இடங்களில் கேன் வாட்டர்களின் விலை 25 ரூபாயிலிருந்து 40 ரூபாயாக உயர்ந்துவிட்டது. 'வடசென்னையில் ஒருகுடம் தண்ணீரின் விலை இருபது ரூபாய். திருப்பூரில் ஒரு குடம் தண்ணீர் 16 ரூபாய், புதுக்கோட்டையில் 12 ரூபாய், ராமநாதபுரத்தில் 15 ரூபாய், மதுரையில் 10 ரூபாய்; சென்னையில் 12 ஆயிரம் லிட்டர் லாரி தண்ணீர் 800 ரூபாய்க்கு விற்பனையாகிக் கொண்டிருந்தது இப்போது 3000 - 5000 ரூபாய் வரை சொல்லப்படுகிறது. அதுவும் உடனே கிடைக்காது என்னும் நிலை. சென்னையில் பல குடும்பங்கள் தண்ணீருக்காக மட்டும் மாதம் 3 முதல் 5000 ஆயிரம் வரை செலவு செய்யும் நிலைக்கு தள்ளப்பட்டுள்ளனர்' என்கின்றன ஊடகச் செய்திகள்.

இயற்கை வளங்களை, நீர் நிலைகளைச் சுரண்டி சூறையாடியதன் விளைவால் நிகழ்ந்தது இந்த கொடுமையான தண்ணீர் தட்டுப்பாடு. சென்னை உள்ளிட்ட அத்தனை நகரங்களிலிருந்த ஏரிகள், பள்ளிக்கரணை போன்ற சதுப்பு நிலக்காடுகள் அனைத்தையும் தூர்த்து பயனற்ற நிலைக்குக் கொண்டு சென்றுவிட்டு இப்போது முழுக்க, முழுக்க நிலத்தடி நீரை மட்டுமே நம்பிக்கொண்டு நிற்கிறோம். நிலத்தடி நீரும் எவ்வளவு நாட்களுக்கு தாக்குப் பிடிக்கும்? தமிழகம் முழுவதுமே நிலத்தடி நீர்மட்டம் அதள பாதாளத்துக்குச் சென்றுவிட்டது. இன்னும் சில ஆண்டுகளில், தென்னாப்பிரிக்காவில் கேப்டவுன் நகருக்கு நிகழ்ந்தது போல் நிலத்தடி நீரே இல்லாத ஜீரோ நிலைக்கு இந்திய நகரங்களும் சென்றுவிடும் என்று எச்சரிக்கிறார்கள்.

அப்படி தண்ணீர் இல்லாத நிலை வந்தால் என்ன செய்ய என்பதற்குக் கடல்நீரைக் குடிநீராக்கலாம் என மாற்றுத் திட்டம் முன்வைக்கப்படுகிறது. இன்னொரு மாற்றாக நதிகளை இணைக்கும் திட்டம் சொல்லப்படுகிறது. இந்த இரண்டு திட்டங்களுமே மிகப்பெரிய செலவைக் கேட்டு நிற்பதுடன், இயற்கை அழிவுகளுக்கே இட்டு செல்லும். எனவே, இது இது நிரந்தர தீர்வை தராது என்பதே நிதர்சனம்.

எனவே, இனிமேலாவது ஒவ்வொரு நகர விரிவாக்கமும் தண்ணீர் வளத்திற்கு ஏற்ப திட்டமிடப்பட வேண்டும். சென்னையில் ஏற்கனவே இருக்கும் மக்களுக்கே தண்ணீர் வழங்கமுடியாத சூழலில் மேலும் மேலும் நகரத்தை விரிவாக்கிக்கொண்டே போவது சென்னையை நீரற்ற நகரமாகத் திவாலாக்கிவிடும்.

இப்போதும் மழைநீர் சேகரிப்பு அமைப்பு உள்ள வீடுகளில் தண்ணீர் தட்டுப்பாடு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. எனவே, இதனை எல்லா வீடுகளுக்கும் கட்டாயமாக்க வேண்டும். மழைநீர் சேகரிப்பு அமைப்பு இருந்தால் மட்டுமே அரசு அந்த கட்டடங்களுக்கு அனுமதி கொடுக்க வேண்டும். அதுபோல அரசு கட்டிடங்கள், பொது இடங்களில் மழைநீரைச் சேமிக்கவும் அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும்.

அரசு மட்டுமின்றி மக்களும் தண்ணீர் சேமிப்பில் அக்கறை காட்டவேண்டும். அனைத்து வீடுகளிலும் மழைநீர் சேகரிப்பு திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும். அதுபோல அனைவரும் மழைநீரை தங்கள் வீட்டிலுள்ள கிணறுகளில் சேமித்து நிலத்தடி நீரை செறிவூட்ட வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் அனைத்து பகுதிகளையும் கான்கிரீட்டுகளாக மாற்றாமல்



மண்தரைகளை விடவேண்டும். இது மழைநீரை உறிஞ்சும். கிடைக்கும் தண்ணீரைச் சிக்கனமாகப் பயன்படுத்தவும் மக்கள் பழகிக்கொள்ளவேண்டும்.

மறைநீரின் முக்கியத்துவத்தை உணர்ந்து அதற்கேற்ப அதிக தண்ணீரை உறிஞ்சும் தொழிற்சாலைகளை மூட நடவடிக்கை எடுக்கவேண்டும். ஏற்கனவே மக்கள் தண்ணீருக்குத் தவிக்கும் சூழலில் வாகனத் தொழிற்சாலைகள், உதிரிப்பாக தொழிற்சாலைகள், ராணுவத் தளவாட தொழிற்சாலைகள் போன்றவை தொடர்ந்து சென்னையைச் சுற்றியும் உருவாகி வளர்கின்றன. சென்னையின் நீர்வளத்திற்கு ஏற்ப இனி புதிதாகத் தொடங்கப்படும் தொழிற்சாலைகளுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்க வேண்டும். ஏற்கனவே, அதிக அளவில் தண்ணீரைப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளை மூட அல்லது வேறு இடங்களுக்கு மாற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும்.

தமிழகம் முழுக்க ஆழ்துளைக் கிணறுகளின் எண்ணிக்கை கட்டுக்கடங்காமல் போய்க்கொண்டிருக்கிறது. அதனை அரசு கட்டுக்குள் கொண்டுவர வேண்டும். ஆழ்துளைக் கிணறுகள் அமைக்க புதிய விதிமுறைகளை உருவாக்க வேண்டும்.

பழங்கால தமிழர்களின் நீர் மேலாண்மை பற்றி உலகமே வியந்து போற்றுகிறது. ராஜராஜசோழன் ஆட்சிக்காலத்தில் குளித்தலை அருகே மாயனூரில் தடுப்பணை கட்டி காவிரி தண்ணீரை உய்யக்கொண்டான் கால்வாய் மூலமாக கொண்டுவந்து திருச்சி வழியாக செங்கிப்பட்டிக்கு அருகில் உள்ள வெண்டையம் பட்டி வரை பாசனம் செய்திருக்கிறார்கள். இந்த கால்வாய் சங்கிலித் தொடராக அமைக்கப்பட்டுள்ளது. அதாவது உய்யக்கொண்டான் கால்வாய் வழியாக வரும் நீர் ஒரு ஏரியில் தேங்கி அதிலிருந்து மிகை நீர் கலிங்கு என்ற அமைப்பு மூலமாக அடுத்த ஏரிக்குச் செல்லும். அந்த ஏரி நிரம்பிய பின்னர் அந்த மிகை நீர் அடுத்த ஏரிக்கு செல்லும். இதுபோல பல ஏரிகளுக்குச் சென்று மீதமுள்ள உபரிநீர் காவிரியின் கிளை நதியான வெண்ணாறில் சென்று கலக்கும்.

இப்படித்தான் தமிழகம் முழுவதும் ஏரி, குளங்களின் அமைப்புகள் உள்ளன. நீரை வீணாக்காமல் நீர் மேலாண்மை செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஊரிலும் விளைநிலத்துக்கு சமமான பரப்பில் அல்லது அதைவிடக் கொஞ்சம் அதிகமான பரப்பில் ஏரி, குளங்கள் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஏரியிலிருந்தும் அந்தந்த ஊரில் இருக்கும் குளங்கள், கண்மாய்கள் நிரம்பும் வகையில் வாய்க்கால்கள் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த வாய்க்கால்களில் பெரும்பகுதி இப்போது ஆக்கிரமிக்கப்பட்டுள்ளது. இதனால் தண்ணீர் செல்லும் வழி தடைப்பட்டு மழைக் காலங்களில் வெள்ளப்பெருக்கும், கோடைக் காலங்களில் தண்ணீர் தட்டுப்பாடும் தொடர்கதையாகிவிட்டது. தமிழகத்தில் உள்ள சுமார் 40 ஆயிரம் நீர்நிலைகளையும், அதற்கான வாய்க்கால்களையும் உடனடியாக போர்க்கால அடிப்படையில் தூர்வாரி இந்த தண்ணீர் தட்டுப்பாடு அடுத்தடுத்த ஆண்டுகளிலாவது ஏற்படாமல் தடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். இல்லையென்றால் இப்போதைய தண்ணீர் பஞ்சத்தை விடவும் மோசமான சூழலை நோக்கி நகர்வோம். ●

# மொழிக் கொல்லியாக இந்தி மாறிய வரலாறு

ரோஷன் கிஷோர் தமிழில்: பூ.கொ.சரவணன்

டெல்லி பல்கலையின் பீகாரிக்கள் இடையே தங்களைத் தரம் தாழ்த்திக்கொள்ளும் ஒரு நகைச்சுவை புழக்கத்தில் இருந்தது. டெல்லிவாலா ஒருவர் தன்னுடன் பயிலும் பீகாரியிடம், "ஏண்டா உன்னோட காலெல்லாம் மண்ணாகி கிடக்கு?" என்று கேட்டால், "நான் நடந்து போய்கிட்டே இருந்தேன். அப்ப அப்படியே காடோவுல (சேற்றுக்குட்டை) விழுந்துட்டேன்" என்பார். காடோ என்பது போஜ் புரி, மகதி மொழிகளில் சேற்றைக் குறிக்கப் பயன்படும் பதம். சேற்றைக் குறிக்க இந்தியில் பயன்படுத்தப்படும் கீச்சட் என்கிற வார்த்தையைப் பீகாரி பயன்படுத்துவது இல்லை. இதிலென்ன சிரிக்க இருக்கிறது என்று தோன்றுகிறதா? ஒரு பீகாரி என்னதான் தன்னுடைய பீகாரின் பட்டிக்காட்டுத்தனத்தை, நவீன ஆடைகளை அணிந்து மறைக்க முயன்றாலும், அவருடைய மொழி அவரை அடையாளம் காட்டிவிடுகிறது.

இந்தக் கேலி, கிண்டல்களைத் தாண்டி மேற்குறிப்பிட்ட உரையாடல் இந்தி பரவலாகப் புழங்கி வரும் பகுதிகளில் படிப்படியாக நிகழ்ந்து கொண்டிருக்கும் வீரியமிக்கக் கலாசார மாற்றத்தை கண்முன் நிறுத்துகிறது. இந்தி அல்லது சர்க்காரி இந்தி (இதைக் குறித்துப் பின்னர் காண்போம்) விந்திய மலைக்கு வடக்கே வாழும் பலகோடி மக்கள் பேசும் பல்வேறு மொழிகளை நிதானமாக அரித்து, அழித்துக் கொண்டிருக்கிறது. டெல்லியில் வாழும் ஒருவரின் கண்முன் பஞ்சாபி, ஹரியான்வி, உருது மொழிகள் இறந்து கொண்டிருக்கலாம். என்னுடைய பகுதியில் மகதி (நாங்கள் மகஹி என்று அழைப்போம்) இந்தியால் அழிந்து கொண்டிருக்கிறது. மகதியின் பெயர் சுட்டுகிறபடி அம்மொழி மகதப் பகுதியோடு தொடர்புடையது. அசோகர் முதலிய வலிமை பொருந்திய மன்னர்கள் கோலோச்சிய பகுதியே மகதம்.

என்னுடைய குடும்பத்தின் அடுத்தத் தலைமுறை வாண்டுகள் டெல்லியிலும் பெருநகரங்களிலும் வளர்ந்து வருகிறார்கள். அவர்களால் மகத மொழியில் தங்குதடையின்றிப் பேச முடியாது. இரு தலைமுறைகளுக்கு முன்புவரை என் குடும்பத்தின் உரையாடல்மொழியாக மகதியே இருந்தது.





இந்தி அறிவுலகத்தில் போஜ்புரி, மகதி முதலிய மொழிகளை வளர்த்தெடுப்பது இந்தியின் நிலையைப் பலவீனப்படுத்திவிடுமா என்கிற வகையிலான காரசாரமான விவாதங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

இப்படிப்பட்ட வேர்களை இழந்து அலைபாயும் நிலையால் பல்வேறு பின்விளைவுகள் ஏற்பட்டுள்ளன. மேற்சொன்ன மொழிகள் பாரம்பரிய பழக்கவழக்கங்களில் ஆதிக்கம் செலுத்துகின்றன. ஒரு எடுத்துகாட்டுப் போதுமானதாக இருக்கும். சாத் பீகார், கிழக்கு உத்திர பிரதேசத்தின் மிக முக்கியமான மதப்பண்டிகையாகும். இப்பகுதிகளில் இருந்து டெல்லி, மும்பை முதலிய பெருநகரங்களுக்கு இடம்பெயர்ந்தவர்களின் எண்ணிக்கை பெருகியவண்ணம் உள்ளது. இந்நிலையில் சாத் விழாவிற்குப் பொது விடுமுறை அறிவிக்க வேண்டுமா, வேண்டாமா என்பது பெரும் அரசியல் பிரச்சினையாக உருவெடுத்து உள்ளது. சடங்குகள் மட்டுமல்லாமல், சாத் விழாவில் நாட்டுப்புற பாடல்களும் இடம்பிடிக்கின்றன.

நான் இதுவரையில் இந்தி மொழியில் எழுதப்பட்ட ஒரே ஒரு சாத் பாடலைக்கூடக் கேள்விப்பட்டதில்லை. அவை மகதி, மைதிலி, போஜ்புரி மொழிகளிலேயே பாடப்படுகின்றன. டெல்லியில் வாழ்கிற பெரும்பாலான இந்தி பேசும் மக்களால் இந்தப் பாடல்களின் பெரும்பகுதிகளைப் புரிந்து, பொருள்கொள்ள முடியாது. இப்பாடல்களை YouTube-ல் ஆர்வமுள்ளவர்கள் கேட்டுப் பார்க்கலாம்.

கேரளாவிற்கு வெளியே வளர்கிற பதின்பருவத்தில் இருக்கும் மலையாள பிள்ளை ஒருவனுக்கு மலையாளம் தெரியும் என்று வைத்துக்கொள்வோம். எப்போது கேரளாவிற்கு வந்தாலும் அங்கு நிகழும் எந்தச் சமூக, கலாசார விழாவையும் அவனால் எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். இப்படித் தன்னுடைய சொந்த மண்ணை விட்டு வெளியேறி வாழும் பீகாரி ஊர் திரும்புகையில் சாத் பாடல்கள் புரியாமல் விழிக்கவே செய்வான்.

அந்தக் காலம் அழகாகத்தான் இருந்தது வகையிலான இத்தகைய மலரும் நினைவுகள் மட்டுமே அழியவில்லை. இந்த மொழிகளைப் பல லட்சம் மக்கள் இன்னமும் தங்களின் அன்றாட உரையாடல்களில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். காடோ (சேறு) என்பதைக் கீச்சட்டை குறிக்கிறது என்பதை அறியாத ஒருவரோடு இயல்பாக அவர்களால் பேச முடியாது. சுருக்கமாக, தன்னுடைய மண்ணைவிட்டு வெளியூரில் வாழ்ந்து வரும் பீகாரி இளைஞன் ஊர் திரும்புகையில் தாய்மண்ணில் தாய்மொழியின்றித் தவிப்பான்.

வட இந்தியாவின் முதன்மையான தொடர்பு



மொழியாக இந்தி இருப்பதையும், மேற்சொன்ன தவிப்பையும் எப்படிப் புரிந்துகொள்வது? இந்தியாவின் மக்கள் தொகை கணக்கெடுப்பு, மக்கள் எந்தெந்த மொழிகளைப் பேசுகிறார்கள் என்பதைப் புரிந்துகொள்ளப் பெருமளவில் உதவுகிறது. மக்கள் தொகை கணக்கெடுப்பு மக்களின் தாய்மொழியைப் பதிவு செய்ய வேண்டும் என்று தெளிவாக அறிவுறுத்துகிறது. தாய்மொழி என்பது ஒரு நபரின் குழந்தைப்பருவத்தில்தாயுடன்உரையாடியமொழியைக் குறிக்கிறது. ஒருவேளை அவரின் தாய் இறந்திருந்தால் என்ன செய்வது? அப்போதும் தாய்மொழி என்பது வீட்டிற்குள் பேசிக்கொள்ளும் மொழி தானே அன்றி, பயிற்றுமொழியோ, சமூக உரையாடலுக்குப் பயன்படும் மொழியோ அல்ல.

இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் எட்டாவது அட்டவணையில் இருபத்தி இரண்டு மொழிகள் பட்டியலிடப்பட்டுள்ளன. தாய்மொழியைக் கணக்கெடுக்க வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு 2001 மக்கள்தொகை கணக்கெடுப்பு (பொதுவெளியில் இருக்கும் சமீபத்திய மொழிவாரி கணக்கெடுப்பு இதுவே) ஒவ்வொரு மொழியின் உட்பிரிவுகளைப் பட்டியல் போடுகிறது. இந்தி என்கிற பெரும் பகுப்பிற்குள் இந்தி உள்ளிட்ட 49 தாய்மொழிகள் பட்டியலிடப்பட்டுள்ளன. இந்தப் பகுப்பின் கீழ் 42.2 கோடி மக்களில் 61% மக்களின் தாய்மொழியே இந்தியாகும். முதல் ஐந்து இடங்களில் இடம்பெறும் போஜ்புரி, மகதி மொழிகளை முறையே 7.8%, 3.3% மக்கள் பேசுகிறார்கள்.

பீகாரில் மேற்சொன்ன நிலைமை அப்படியே தலைகீழாக மாறுகிறது. கால்வாசிபேர் கூட இந்தியை தங்களின் தாய்மொழியாகப் பதிவு செய்யவில்லை. போஜ்புரி, மகதி மொழியைத் தாய்மொழியாகக் கொண்டிருப்பவர்கள் முறையே 33.6% , 20% ஆவர். எண்ணிக்கையாகச் சொல்ல வேண்டுமென்றால், முறையே இரண்டு கோடிக்கும், 1.2 கோடிக்கும் மேற்பட்ட மக்கள் இம்மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கிறார்கள். கூட்டாக இவர்களின் எண்ணிக்கை ஒட்டுமொத்த ஆஸ்திரேலியாவின் இரண்டரை கோடி மக்கள் தொகையை விட அதிகமாகும்.

தன்னுடைய சொந்த நிலத்திலேயே இந்தி எத்தகைய கலாசார வன்முறையைக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறது என்பதற்கு மேற்குறிப்பிட்ட எண்கள் கட்டியம் கூறுகின்றன. இந்தி மொழியை, இந்தி பேசாத மாநிலங்களின் மீது திணிப்பதால் உண்டாகும் கேடுகள் குறித்துப் பக்கம் பக்கமாக எழுதி குவித்துள்ளார்கள். ஆனால் மகதி, போஜ்புரி முதலிய மொழிகளை அரித்து அழிக்கும் இந்தியின் அச்சம் தரும் மேலாதிக்கச் செயல்திட்டம் குறித்தும் பேச வேண்டியிருக்கிறது. இந்தி-இந்து-இந்துஸ்தான் என்கிற வலதுசாரி இந்து அரசியலின் இன்னொரு பண்பு தானோ இது? இந்தி தேசியத்தின் வரலாற்றைச் சற்றே திரும்பி பார்ப்பது பயன்தரக்கூடியதாக இருக்கும்.

Orient BlackSwan பதிப்பகம் வெளியிட்டிருக்கும் அலோக் ராய் எழுதிய 'இந்தி தேசியம்' என்கிற நூல் இந்தி தேசியத்தின் ஆழ, அகலங்களைப் புரிந்துகொள்ள விரும்புபவர்களுக்கான நல்ல அறிமுகம் ஆகும். அலோக் ராய் அலாகாபாத், டெல்லி பல்கலைக்கழகங்களில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றியவர்.




உருது, இந்தி மொழிகளில் எழுதிய புகழ்பெற்ற எழுத்தாளரான முன்ஷி பிரேம்சந்தின் பேரன் அலோக் ராய். இந்நூல், இன்றைக்கு நாம் அறியும் இந்தி எப்படி இத்தனை ஆதிக்கம் மிக்கதாக உருவெடுத்தது என்பதை விரித்துச் சொல்கிறது. பிரிட்டிஷ் வருகைக்கு முந்தைய ஆட்சிக் காலத்தில் பாரசீகமே இந்தியாவின் அதிகாரப்பூர்வ வரிவடிவமாக இருந்தது. இது மேட்டுக்குடி அல்லாதவர்களைப் பெருமளவில் பாதித்தது. குறிப்பாகப் பாரசீக வரிவடிவத்தை அறியாத இந்துக்கள் இயல்பாகவே அவதிக்கு ஆளானார்கள். வட மேற்கு மாகாணங்கள், அவாத் பகுதிகளின் லெப்டினன்ட் கவர்னராகத் திகழ்ந்த சர் அந்தோணி மெக்டொன்னெல் 1900இல் தேவநாகரி வரிவடிவத்தை நீதிமன்றங்களில் பயன்படுத்த அனுமதி நல்கினார். இந்தி தேவநாகரி வரிவடிவத்திலேயே எழுதப்பட்டு வந்தது. இந்த முடிவுக்குப் பின்னால் இரு காரணிகள் இருந்ததாக அலோக் ராய் கருதுகிறார். ஆட்சியதிகார மொழி பொது மக்களுக்குப் புரியும் வண்ணம் இருக்க வேண்டும். மேலும், 1857 கிளர்ச்சியில் இஸ்லாமிய மேட்டுக்குடியினர் முக்கியப் பங்காற்றினார்கள். பிரிட்டிஷ் ஆட்சி நிர்வாகத்தில் பாரசீகத்தின் ஆதிக்கத்தை முடிவுக்குக் கொண்டு வருவதன் மூலம், இஸ்லாமியர்களின் சமூக - பொருளாதார நிலையை வலுவிழக்க செய்ய இயலும். பாரசீகம் தெரியாததால் வாய்ப்புகளை இழந்த இந்துக்கள் இதனால் அகமகிழ்ந்தார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை. வரி வடிவம் எது என்பதை எளிதாகத் தேர்வு செய்துவிட்டாலும் எதனை அலுவல் மொழியாக மாற்றுவது என்பதில் சிக்கல் எழுந்தது. இந்தியாவில் தரமன இந்தி ஒன்றை வளர்த்தெடுக்க வேண்டும் என்றும் பிரிட்டிஷார் விரும்பினார்கள். இந்தி, உருது மொழிகளின் கலப்பில் வழங்கி வந்த இந்துஸ்தானி மொழி இத்திட்டத்திற்கு ஏற்றதாக இருக்கவில்லை.

அலோக் ராயின் நூலில் வரும் தகவல் ஒன்று தரம் நிறைந்த மொழிக்கான தேடலை பிரிட்டிஷார் 1857இக்கு முன்பே துவங்கி விட்டார்கள் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. அன்றைய அரசாங்க கல்வித்துறையின் 1846 - 47க்கான ஆண்டறிக்கை ஒரு செய்தியை பதிவு செய்கிறது. பனராஸ் கல்லூரியின் முதல்வரான ஜே.ஆர். பாலன்டைனேவிடம் ஒரு மாணவன் கேள்வி ஒன்றை எழுப்பினான். “பல நூறு பேசுமொழிகள் வழங்கி வரும் நிலையில், ஐரோப்பியர்கள் எதனை இந்தி என்று குறிக்கிறார்கள் என்று தெரியவில்லை. எங்களுடைய பார்வையில் எல்லாப் பேசுமொழிகளும் இந்தி என்கிற பெயருக்கு உரியது” என்றான். அதற்குப் பதில் அளித்த பாலன்டைனே, “தேசிய மொழியை உருவாக்கும் பொறுப்பைப் பட்டிக்காட்டான்களிடம் விட்டு விட்டதற்காக” மாணவர்களைக் கடிந்து கொண்டார் என்கிறது அவ்வறிக்கை. மேலும், “பயனற்ற மாகாண பேசுமொழிகளைத் துரத்தி அடித்துவிட்டு” தரமான இலக்கியத்தைப் படைக்குமாறு அவர் அறிவுறுத்தியதாகத் தெரிய வருகிறது.

எது தேசிய மொழியாக இருக்க வேண்டும் என்கிற தேடல் விரைவில் அரசியலுக்குள்ளும் ஊடுருவி விட்டது. இந்து, இஸ்லாமிய அறிவறிஞர்கள் போட்டி

போட்டுக்கொண்டு தங்களுடைய தரமான மொழிகளில் வழங்கி வந்த பாரசீக, சம்ஸ்கிருத வார்த்தைகளை நீக்கினார்கள். இந்த இருமை வேகமெடுத்த நிலையில், இந்தி என்கிற நாமத்திற்கு உரிய பலநூறு பேசு மொழிகள் மொழிப்போரின் களப்பலியாகச் சிதைந்து போயின. இதனை எதிர்த்தவர்கள் அனைவரும் துரோகிகள் என்று கட்டம் கட்டப்பட்டார்கள். அலோக் ராய், நாதுராம் கோட்சேவின் இறுதி வாக்குமூலத்தை மேற்கோள் காட்டுகிறார். காந்தியை சுட்டுக்கொன்றதற்கு அவர் சமஸ்கிருதமயமாக்கப்பட்ட இந்தியை எதிர்த்ததும் ஒரு காரணம் என்கிறான் கோட்சே.

கவலைதரும் தற்காலத்தில் இந்த வரலாற்றை மறந்துவிடக் கூடாது. இவ்வரலாற்றை நினைவில் நிறுத்த வேண்டியது தவிர்த்துவிடமுடியாத தேவையாகும். இந்தியை திணிக்கும் முயற்சிகள், அறிவிப்புகள் ஐம்பதுகள், அறுபதுகளின் இந்தி எதிர்ப்புக் கனல்களை மீண்டும் மூட்டிவிடுமோ எனும் அச்சம் பீடிக்கிறது.

இத்தகைய பிரித்தாளும் சூழ்ச்சிகளை இந்தி அறிவுலகமும் கலாசார வெளியும் போதுமான அளவு எதிர்க்கவில்லை. இதனால், ஒட்டுமொத்த இந்தி மொழி பேசும் மக்களும் மொழி வெறியர்களாக முத்திரை குத்தப்படுகிறார்கள்.

இதுவரை நாம் தெரிந்துகொண்டவற்றை அசைபோட்டு பார்த்தால் இதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. ஒற்றைப்படையான இந்தியை வளர்த்தெடுக்கும் செயல்திட்டத்தின் முதல் பலி இந்தியே. தேசம், கலாசாரம் என்கிற பெரும் கதையாடல்களை வளர்த்தெடுக்கும் போர்வையில், நம்முடைய உள்ளார்ந்த பன்மைத்துவம் அழிவை நோக்கி தள்ளப்பட்டுள்ளது. இந்தி கவிஞர் சுதாமே பாண்டே தூமில் அறுபதுகளில் எழுதிய கவிதையை அலோக் ராய் மேற்கோள் காட்டுகிறார். இக்கவிதை இந்தத் துயரத்தை வலிமையாக வெளிப்படுத்துகிறது:

**துமரா ஏ தமிழ்-துக்**
**மேரி இஸ் போஜ்புரி பீடா கா**
**பாய் ஹை**
**பாஷா உஸ் திக்தமி தரிந்தே கா கௌர் ஹை**

**(உன்னுடைய தமிழ்த் துயரம்**

**என்னுடைய போஜ்புரித் துயரத்துக்குச் சகோதரன் -**

**வஞ்சகமிகுந்த மிருகத்துக்கு மொழி வெறும் பருக்கை தானே)**

இந்தச் சிக்கலை தீர்க்க முனைவதை விட அது குறித்து உரையாடுவது எளிமையானது என்பதில் ஐயமில்லை. இந்தி அறிவுலகத்திலேயே, போஜ் புரி, மகதி முதலிய மொழிகளை வளர்த்தெடுப்பது இந்திக்கு இருக்கும் செல்வாக்கை சீர்குலைக்குமா என்று காரசாரமான வாக்குவாதங்கள் நடைபெற்றுக் கொண்டுள்ளன. இந்தியின் மேலாதிக்கம் மேன்மேலும் அரசின் ஆதரவை பெறுவதற்கு உதவிகரமாக உள்ளது.

இக்கட்டுரையின் ஆரம்பத்தில் நாம் மகதி முதலிய மொழிகளிடம் இருந்து எப்படி மக்கள் எப்படி அன்னியப்பட்டுப் போகிறார்கள் எனக்கண்டோம். இந்தச் சிக்கலை மகதியை அரசியலமைப்பு சட்டத்தின் எட்டாவது அட்டவணை மொழியாக மாற்றுவதாலோ (மைதிலி 2004இல் அட்டவணையில்



அலோக் ராய்

இணைக்கப்பட்டது), ஓரிரு பல்கலைகளில் தனித்துறைகளைத் துவக்குவதாலோ தீர்ந்து விடுமா என்று எனக்குத் தெரியவில்லை.

அடுத்து ஐந்தாண்டுகளில் யாரேனும் ஒருவர் தெற்கு டெல்லியின் மல்டிப்ளெக்ஸ் திரையரங்கு ஒன்றில் திரையிடக்கூடிய போஜ்புரி / மகதி மொழி திரைப்படத்தை எடுப்பார்களா? இந்தி பகுதி அறிவறிஞர்கள் தங்களுடைய சாதி அரசியலில் இருந்து மீண்டெழுந்து மதச்சார்பற்ற, வட்டார, வெகுமக்கள் பண்பாட்டைப் பேணி வளர்ப்பார்களா? இத்தகைய பன்மைத்தன்மை தொடர்ந்து அழிவதால் இந்தி பேசும் இந்தியப் பகுதிக்கு ஏற்படப்போகும் இழப்புகள் என்னென்ன? இது குறித்து நம்முடைய அரசியல்வாதிகளுக்கு ஏதேனும் அக்கறை இருக்கிறதா?

இன்றைக்கு இந்தியாவிலேயே பிரபலமான வெகுமக்கள் தலைவராகத் திகழும் பிரதமர் நரேந்திர மோடிக்கு இந்தப் பன்மைத்தன்மையின் முக்கியத்துவம் புரிந்திருக்கிறது. 2014 நாடாளுமன்ற தேர்தலுக்கான தன்னுடைய பரப்புரையை 27 அக்டோபர் 2013 அன்று பீகாரின் ஹுங்கர் பேரணியில் துவங்கினார். பீகாரின் முப்பெரும் பேசுமொழிகளான போஜ்புரி, மகதி, மைதிலியில் இரண்டு வாக்கியங்களை உதிர்த்தார். எப்போதும் போல, திரண்டிருந்த மக்கள் கூட்டம் மோடிக்கு ஆரவாரம் செய்தது.

மோடியின் சக பயணிகளால் முன்னெடுக்கப்படும் சமஸ்கிருதமயமான, மேலாதிக்கம் மிக்க இந்தியால் நிகழ்ந்திருக்கும் சேதாரங்கள் ஏராளம். இவற்றை மோடியின் அரசியல் ஆளுமை சீர்செய்துவிடமுடியும் என்று நம்புவதற்கான எதுவும் இதுவரை நிகழவில்லை என்பது வருத்தத்துக்கு உரியது. ●

(இக்கட்டுரை 'Livemint' நாளிதழில் 'How a Bihari lost his mother tongue to Hindi' எனும் தலைப்பில் வெளியானது. ரோஷன் கிஷோர் 'இந்துஸ்தான் டைம்ஸ்' நாளிதழின் 'Data & Political economy' ஆசிரியர்.)

**பூ.கொ.சரவணன் <saravananagatha@gmail.com>**

# டி. கண்ணன் கவிதைகள்



## ஓங்கி

சோப்பு கரைவது போல்
பேனாவில் மை தீர்வது போல்
காண இனி அணில் மறைவது போல்
சீராய் நிகழ வேண்டும்
என் மரணம் என ஆழ் விருப்பு
மரணத்திற்கு வேறு திட்டம்
பாடாய்ப் படுத்துகிறது

## ஆழி

வேறொரு நிலவின் புதிரில்
சுழல்கிறது பூமி
இலைகளின் நிழல்களை
சுமந்து கொண்டு அணில்கள்
தாவி மறைகின்றன
வானத்தின் பிரபஞ்ச விசுவாசம்
தூரத்தே புரள்கின்றன கார் மேகங்கள்
காட்சியின் சொரூபத்தில்
அலைந்து இளப்பாறுகின்றன
அந்தியின் கண்கள்

## அற்புதம்

சற்று தூரத்தே அமர்ந்திருந்த
நாயை
கண்ணால் அழைத்தார்
பிரசிங்கிக்கும் யோகி
மிருதுவாய் வந்து அவரருகே
அமர்ந்தது நாய்
புகைப்படம் எடுக்கப்பட்டது
எடுத்த புகைப்படத்தில்
நாய் இல்லை ●

# அன்புள்ள ஏவாளுக்கு

**தர்மினி**

புனைவுகளைப் படிப்பதற்கு ஆர்வம் குறைந்துவிட்டதே என்று சில நேரங்களில் கவலையோடு நினைப்பேன். உண்மையின் முகங்களைக் காண்பது விருப்பமாயிருக்கிறது. எனது நேரத்தைக் கொடுத்துப் படிக்கத் தன் வரலாறுகளும் கட்டுரைகளும்தான் உவப்பாயிருக்கின்றன.

மேலும், இப்போதெல்லாம் வெளியாகும் புத்தகங்களில் நல்ல கதையோ நாவலோ படிக்கக் கிடைப்பதே அபூர்வமாகிவிட்டது. திரும்பத் திரும்ப ஒரே மாதிரியான எழுத்துகள், கதைகள் அல்லது வலிந்து சொற்களைத் திருகி முறுக்கி, தீவிரமானதாகக் காட்டும் முனைப்பு என்பதாகப் பல கற்பனைகளைப் படிக்க அலுப்பு ஏற்படுகின்றது. வாசிப்பின் அனுபவத்தை உணர்த்த எப்போதாவது சில கிடைத்து வாசிப்பைச் சோர்வடையச் செய்யாமலிருக்கின்றன. பெரும்பாலும் மொழிபெயர்ப்புப் புத்தகங்கள் எனக்கு ஏமாற்றத்தைத் தருவதில்லை.

அப்படித்தான் ஆலிஸ்வாக்கர் எழுதிய இந்நாவலும் வாசிப்பின் இனிய அனுபவத்தைத் தந்தது. ஜிலீமீ சிஷீறீஷீக்ஷீ றிஹுக்ஷீஜீறீமீ என்ற பெயரில் *1982*இல் ஆங்கிலத்தில் வெளியாகியது. *2018* டிசம்பர் தமிழில் 'அன்புள்ள ஏவாளுக்கு' என்ற பெயரில் எதிர் வெளியீடாக வந்திருக்கிறது. மொழிபெயர்த்த ஷஹிதாவின் தமிழ் எளிமை - அருமை - அழகு. யதார்த்தமான வாழ்வும் பழமொழிகளுமாக ஒவ்வொன்றையும் வேறொரு விதமாக நோக்கும் எழுத்தும், அந்நியமாக உணரச்செய்யாத மொழிபெயர்ப்புமாக நாவல் *352* பக்கங்கள். சில புத்தகங்கள் எப்போது முடியும் எனப் பக்கங்களை எண்ணச் செய்வன. இன்னும் சில படிக்க முடியாமல் இடையில் மூடி வைக்கச் செய்வன. இப்புத்தகம் போல சிலதான் முடிந்துவிடுமோ எனக் கொஞ்சம் கவலைப்படச் செய்வன.



இரண்டு நாட்களாக வழமையான வேலைகள் எப்போது முடியும்? எப்போது படிக்க நேரம் கிடைக்கும்? எனக் காத்துக் காத்து எடுத்தெடுத்து ஆவலோடு படித்த நாவலாகிப்போனது 'அன்புள்ள ஏவாளுக்கு'. அன்பளித்த கிருபா முனுசாமிக்கு நன்றி!

வீண் வர்ணனைகளற்ற எளிமையான தொடக்கம். 'எனக்குப் பதினான்கு வயதாகிறது'. சிறுமி சீலி தந்தையால் பாலியல் வன்கொடுமைக்கு ஆளாவது முதல் பக்கத்திலேயே கடவுளுக்கொரு கடிதமாக எழுதப்பட்டுவிடுகிறது. அவளுக்கு ஆதரவளிக்க யாருமில்லை. கடவுளுக்குக் கடிதங்களாகக் கதை தொடர்கிறது. இதற்கிடையில் தந்தை மூலமாக இரு குழந்தைகள் பிறந்து அவை காணாமலாக்கப்படுகின்றன. சீலியின் தாயின் இறப்பு இன்னும் மோசமான நிலைமையை ஏற்படுத்துகின்றது. தங்கை நெட்டியையும் தகப்பனிடமிருந்தும் காப்பாற்ற வேண்டும். வயதான மூன்று பிள்ளைகளுடைய மனிதனை மணம் செய்யச் சம்மதிக்கிறாள் சீலி. பின்பு, சீலியோடு அவ்வீட்டிற்குச் சென்று வாழ்ந்த தங்கை நெட்டி, அம்மனிதனிடமிருந்து தப்பித்துச் சென்றுவிடுகிறார்.

இவர்களோடு வந்து சேரும் உறவும் பகையுமான பெண்கள், நாவலில் ஆண்களை ஒன்று சேர்ந்து கேலி செய்வதும், பெண்களது அவலங்களை அவர்கள் ஆளுக்காள் புரிந்தவர்களாக அரவணைப்பதும், எனச் சம்பவங்கள் மனித மனதின் நுட்பங்களைத் தொட்டுச் சொல்கின்றன. அமெரிக்காவில் அடிமைகளாக்கப்பட்ட ஆப்பிரிக்க வம்சாவழியினருடைய துன்பங்களும் அதனுள்ளும் கொண்டாட்டமான வாழ்வுமாக இம்மனிதர்கள். அவர்களிடம் நிரந்தரக் கோபமில்லை. மன்னித்து விடுகிறார்கள். எளிதாக வீட்டை விட்ட வெளியேறி விடுகிறார்கள். உறவுகளின் புனிதங்களையெல்லாம் இதுதான் மனித இயல்பென்று உடைத்துவிடுகிறார்கள், பாடுகிறார்கள், ஆடுகிறார்கள்.

சீலி, 'மிஸ்டர் ________ ' என்றுதான் தன்னை மணம் செய்தவரைக் குறிப்பிடுகிறார். அவ்வீட்டில் சீலி பணியாள் போல நடத்தப்பட்டு வேலைகளும் அடிகளும் வாழ்வாக இருக்கிறது. மிஸ்டர்________ தன் காதலியான ஷூக் ஏவரி என்ற பாடகியை வீட்டிற்கு அழைத்து வந்துவிடவும் பணிவிடை செய்ய வேண்டிய கட்டாயத்தில் சீலி இருக்கிறார். ஆனாலும் சீலி, ஷூக் ஏவரி மீது ஈர்ப்பும் அன்புமாக நோய்வாய்ப்பட்டவரைப் பராமரிக்கிறார். ஷூக் ஏவரிக்குக் காதலனாக, அறிவாளியாக, கௌரவமானவராகத் தெரிந்த, மிஸ்டர் ______ பற்றிய சீலியின் முறைப்பாடுகள், இப்போது ஷூக் ஏவரிக்கு அம்மனிதன் மீது வெறுப்பை ஏற்படுத்துகின்றது. கடவுள் நம்பிக்கை பற்றிய நிறையக் கேள்விகளையும் பெண் உடல் - உணர்வுகள் - வழமைகளை மீறல்



என உரையாடும் ஒரு தோழியாக சீலிக்கு ஷூக் ஏவரி வாழ்வை இனிமையாக்குகின்றார். ஒரு கட்டத்தில் சீலியும் ஷூக் ஏவரியும் காதலர்களாகி விடுகின்றனர். இவர்கள் தவிர இன்னும் சேரும் விலகும் உறவுகள் ஒவ்வொருவரும் பிறரை நட்போடு நாடுகின்றனர்.

ஷூக் ஏவரி, அடிகளும் வேலைகளும் வாங்கும் இந்த ஆண்களிடமிருந்து சீலியையும் மிஸ்டர் _______ருடைய மகனது துணைவியையும் தனது வீட்டிற்கு அழைத்துச் சென்று தங்க வைக்கிறார். அவர்களைப் பாடகியாகவும் தையற்கலையில் தேர்ச்சி பெற்று சம்பாதிப்பவராகவும் ஆளுமைமிக்க பெண்களாகவும் ஆக்குகின்றார். குழுவில் புதிதாக இணைந்த பத்தொன்பது வயது ஃப்ளூட் இசைக் கலைஞன் ஜெர்மைன் மீது காதல் வயப்பட்ட ஷூக் ஏவரி,'இப்படி ஓர் ஆள் மயக்கிப் பேரை அவனுக்கு யார் வைத்தார்கள் என்று தெரியவில்லை' எனச் சீலியோடு தன் புதிய காதலைப் பற்றிப் பரவசமாகச் சொல்வதைச் சீலியால் தாங்க முடியவில்லை. அதைத் தொடர்ந்து ஷூக் ஏவரி இவர்களிடமிருந்து விலகிவிடுகிறார். மிஸ்டர் _______ சீலியின் மேல் மரியாதை கொள்கிறார், நண்பர்களாகின்றனர். அவர்கள் இருவருமாகத் தங்கள் காதலி ஷூக் ஏவரியின் அழகும் அன்பும் பற்றிப் பிரிவாற்றாமையோடு கூடியிருந்து சோகமாகப் பேசுவது! மனங்களை எப்படி வாசிப்பது என ஆச்சரியப்படுத்தும் எழுத்து அது.

நெட்டி, மதப் பரப்புரை செய்பவர்களிடத்தில் சேர்ந்து அக்காவிற்குக் கடிதங்கள் எழுதுகிறாள். மதப் பிரச்சாரகர்களோடு ஆப்பிரிக்காவின் செனகலை சென்றடைந்த போது அங்கு கண்ட கறுப்பர்களை கறுப்பிலும் கறுப்பு என்பதோடு இப்படி எழுதுகிறார்: ' அந்தக் கறுப்பு அத்தனை ஆழமாய் இருக்கிறது; அது நம் கண்களில் பட்டுத் தகதகக்கிறது, நிலவொளி பட்டு மினுங்குகிறது, சூரிய ஒளியிலும் அவ்வளவு ஒளிர்கிறது'.

கொக்கோ பண்ணைத் தோட்டத்தில் வேலை செய்தவர்கள் களைப்பிலும் பாடுகிறார்கள். களைத்துப் போனவர்கள் ஏன் பாடுகிறார்கள் என்ற கேள்விக்கு, 'வேறெதுவும் இயலாத அளவுக்குக் களைத்திருப்பதால்' எனப் பதில் வருகிறது. அவர்களது நம்பிக்கைகளும் உபசரிப்பும் கூடி வாழ்தலும் நெட்டிக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்துகின்றது. ஆப்பிரிக்காவை இருண்ட கண்டமென்றும், மக்கள் நாகரிகமற்றவர்களென்றும், வெளியுலகுக்கு வெள்ளையர்கள் கதை பரப்பியதற்கு எதிரான பார்வையை அமெரிக்க - ஆப்பிரிக்கரான நெட்டியின் கடிதங்களில் ஆலிஸ்வாக்கர் எழுதிச் சென்றுள்ளார்.




வெள்ளையர்களால், ஒலிங்கா கிராமத்தின் ஊடாகச் சாலைகள் போடப்பட்டு, பயிர்கள், குடியிருப்புகள் அழிக்கப்பட்டு, இரப்பர் கம்பனி தொடங்கப்படுகிறது. 'ஒலிங்காக்களுக்கு இனியும் தங்கள் கிராமம் சொந்தமில்லை என்பதால் அவர்கள் அதற்கு வாடகை தந்தாக வேண்டும். தண்ணீரும் அவர்களுக்கு சொந்தமில்லை, அதனால் அதற்கு அவர்கள் வரி கட்ட வேண்டும். முதலில் சனங்கள் சிரித்தார்கள். அவர்கள் இங்கு காலம் காலமாக வாழ்ந்து வந்திருக்கிறார்கள். இதெல்லாம் அவர்களுக்கு ரொம்பப் பைத்தியக்காரத் தனமாகத் தெரிந்தது. ஆனால், தலைவர் சிரிக்கவில்லை. ' அவர்களது நிலை போலத்தான் வெள்ளைக்காரர்கள் கைப்பற்றிய நாடுகள் என்பதை ஒரு தரம் யோசித்து, நிதானித்துதான் மிகுதியை வாசிக்க முடிந்தது.

இவர்கள் இருவரது கடிதங்களும் அமெரிக்காவில் வாழும் ஆப்பிரிக்கர்களின் அவலத்தைச் சொல்கின்றன. அவ்வாறான கடிதங்களில், 'அப்பா நம் அப்பாவல்ல' என்றும், குழந்தைகள் இருவரும் உயிரோடு வளர்கின்றனர் என்றும், சீலிக்குத் தகவல்கள் கிடைக்கின்றன. 'அன்புள்ள கடவுளுக்கு' எனக் கடிதங்களை எழுதிய சீலி இப்போது, 'அன்பு நெட்டி' என எழுதுகிறார். பல வருடங்களாகப் பிரிந்த சகோதரிகள் இப்போது கடிதங்கள் மூலமாக உரையாடத் தொடங்கிவிடுகின்றனர். கடவுள் ஏன் வெள்ளை மனிதனாக இருக்கிறார்? கடவுள் எப்படி இருப்பார்? வெள்ளையர்களின் பைபிளில் கடவுளாக இருப்பவர் என உருவ இலட்சணங்களைப் பற்றி விமர்சிக்கின்றனர். அக்கடவுள் வெள்ளைக்காரர்களின் கடவுளாயிருப்பதால் வெள்ளையர் போலவே இருக்கிறார் என்று சொல்லும் நெட்டி, இயேசுவின் கேசம் செம்மறி ஆட்டுக்குட்டியின் மயிரைப் போலவே என்று பைபிளில் எழுதப்பட்ட வாக்கியத்தை முன் வைத்து அவரது நிறம், கேசம், கண்கள் எல்லாம் எவ்வாறு வெள்ளையராகத் தோற்றப்பாட்டைத் தருமாற மாற்றப்பட்டன என்று மேலும் வினவுகிறார்.

நெட்டிக்கு சீலி எழுதிய கடிதத்தில் இவ்வாறு, 'பைபிளைப் படித்தவர்களுக்குக் கடவுள் வெள்ளையர் என்ற பிம்பம்தான் தோன்றும். நானும் கடவுள் வெள்ளையர் அதிலும், ஆண் என்றறிந்ததில் மனம் வெறுத்துப் போனேன். அவர் உன் பிரார்த்தனைகளுக்குச் செவிசாய்க்கவில்லை என்று நீ கோபமாக இருக்கிறாய். சட்! கறுப்பர்கள் பேச்சுக்கு எந்த மேயராவது மதிப்பளிக்கிறாரா? என்பது சோஃபியாவின் கேள்வி.' (இந்த சோஃபியா வெள்ளைகார மேயரின் வீட்டிற்குப் பணிப்பெண்ணாகப் போகமாட்டேன் என்றதால் அடித்து ஊனமாக்கப்பட்டு தண்டனையாக மேயர் வீட்டில் சிறைக்கைதி வாழ்வை வாழ்ந்தவர்)

மீண்டும் ஷூக், 'ஒரு நட்சத்திரத்தைப் போல உடுத்திக்கொண்டு காரிலிருந்து இறங்கியவள், ஓ! சீலி என் அம்மாவை எண்ணி ஏங்கியதை விடவும் உன்னைப் பிரிந்து ஏங்கினேன் என்றாள்.'

இந்நாவல் பல சுவாரசியமான உரையாடல்களும் பொருள் கொண்ட வசனங்களுமாக எழுதப்பட்டுள்ளது. ஆயினும், மாறிமாறிக் கடிதங்களில் கதை நகர்வதால் தன்கூற்று - பிறர்கூற்று எதுவெனச் சில இடங்களில் குழப்பம் ஏற்படுகின்றது. குறியீடுகள் இடப்பட்டிருப்பின் இலகுவாக இருந்திருக்கும். அவர்கள் தம்மைத் தாமே கேள்வி கேட்கிறார்கள். பிறரோடு உரையாடுகிறார்கள். அவை வாசகராகிய நமது சுயவிசாரணையாகவும் ஆகின்றது. ஆலிஸ்வாக்கர் கவிஞராகவுமிருப்பதால், இப்புத்தகத்தில் வார்த்தைகள் கச்சிதமாகவும் எழிலாகவும் வசனங்களில் வந்தமர்கின்றன. ●

தர்மினி <nitharmi@gmail.com>

---

அன்புள்ள ஏவாளுக்கு - ஆலிஸ்வாக்கர்,
தமிழில்: ஷஹிதா; பக்கம் 352, விலை ரூ. 350;
வெளியீடு: எதிர், 96 நியூ ஸ்கீம் ரோடு,
பொள்ளாச்சி - 642 002; தொலைபேசி +9199425 11302;
இணையத்தில் பெற: www.ethirveliyedu.in

# கரையில் மோதும் நினைவலைகள்

**நடேசன்**

## 1. கள்ளவிசா

எனது அறுபத்துஇரண்டாவது பிறந்ததினம். கடந்த மார்கழி 23ஆம் திகதியன்று மாலை 6.30 மணி வரையும் வேலை செய்தேன். வெளியே சென்று காலையில் ரெஸ்ரோரண்ட் ஒன்றில் உணவருந்துவோம் என்று மனைவி கேட்டபோது மறுத்துவிட்டேன். கோதில்லாத நண்டு வீட்டில் சமைக்கப்பட்டிருந்தது. வீட்டில் உணவு சிறந்ததாக இருக்கும்போது வெளியில் போகத் தேவையில்லையே? ஆனால், வாய்க்கு இதமாகவும் சமிப்பதற்கு வசதியாகவும் வெள்ளை வைன் போத்தல் ஒன்றை வாங்கி வருவதற்கு நினைத்தேன். நியூசிலாந்து ஓய்ரர் பே சவன் பிலாங் எனக் கேட்டேன். வெள்ளை வைனும் கடல் உணவுக்குப் பொருத்தமானது.

எங்கள் வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள வைன் கடைக்குச்சென்று காரில் இருந்து இறங்கியதும், வெக்கை முகத்தில் அடித்தது. வெய்யில் எரித்தது. காற்றை யாரோ திருடிவிட்டார்களோ என்பதுபோல் மரங்கள் அசையவில்லை. மெல்பனின் கோடையில் 9 மணிக்குப் பின்பாகவே இரவு ஊர்ந்து வரும். வேறு ஒருவரும் இல்லை. மதுக்கடையில் வேலை செய்பவரை பலமுறை பார்த்திருக்கிறேன். ஆனால், இதுவரை பேசியதில்லை. அவரது முகத்தில் ஏதோ சோகம் தெரிவதுபோல் எனக்குப் பட்டது. இரவு நேரங்களில் அதிகமாக வேலை செய்பவர். அவர் ஒரு வெள்ளை அவுஸ்திரேலியர். எனது வயதிருக்கும். கண்ணாடி போடாதவர். தீர்க்கமான பார்வையுடன் மிகவும் திடகாத்திரமானவர்.



"உங்களுக்கு நத்தாருக்கு விடுமுறையில்லையா?"

"நான் வருடம் முடிந்த பின்பாக பெண்டிகோ போகவேண்டும். அதற்கு முதல் போக முடியாது. எனக்கு இங்கு வேலை உள்ளது" என்றார்.

நத்தார்ப் பண்டிகையை இந்த மனிதர் தனிமையில் கழிக்கவேணடும் என்ற கழிவிரக்க உணர்வு எனக்குள் ஏற்பட்டது. நத்தார் விடுமுறையை எவ்வளவு ஆவலாக அவுஸ்திரேலியர்கள் கொண்டாடுவார்கள். நத்தாரில் இருந்து புதுவருடம் வரை வைத்தியசாலை, ஹோட்டல், பொலிஸ் போன்றவற்றைத் தவிர எல்லா அலுவலகங்களும் மூடப்பட்டுவிடும். அவற்றிலும் எண்ணிக்கை குறைந்தவர்களே வேலை செய்யும் காலம். ஜனவரி மாதம் அதிகமாக வேலை யிராது. பலர் விடுமுறைக்காக உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் தங்கள் வசதிக்கேற்ற விடுமுறையைக் கழிக்கப் போய்விடுவார்கள். அப்படி திறந்திருக்கும் அலுவலகங்களிலும் எதுவித வேலையும் நடைபெறாது. பத்திரிகைகள் செய்திகளற்று எயிட்ஸ் நோய் வந்தவர்களாக மெலிந்துவிடும். தொலைக்காட்சிகளில் பழைய காட்சிகளை மீண்டும் காண்பிப்பார்கள்.

அந்த மனிதர் குடும்பத்தோடு இராமல், இந்த வயதில் 300 கிலோ மீட்டர்களுக்கப்பால் தனித்து இருப்பது என் மனதை வாட்டியது.

"பெண்டிக்கோவில் வேலையில்லையா?"

அந்தக் காலத்தில் பெண்டிக்கோ, பலரட் முதலான பிரதேசங்களில் தங்கச் சுரங்கங்களில் வேலைக்கு வந்தவர்களாலே மெல்பன் என்ற நகரமே உருவாகியது. தங்கம் தற்போது முடிந்துவிட்டது. தற்பொழுது பெண்டிக்கோ ஒரு விவசாய நகரம்.

"பழத்தோட்டங்கள் இப்பொழுது இல்லை. எல்லாம் வெளிநாட்டில் இருந்து இறக்குமதி செய்கிறார்கள்."

"எப்படி மாடு வளர்ப்பு?"

"அது பரவாயில்லை. பால் உற்பத்தி நடக்கிறது. பழத்தோட்டங்கள் இல்லாததால் தற்பொழுது வேலை கிடைப்பது கடினம்."

"அங்கிருந்த ஆரஞ்சுத் தோட்டங்களுக்கு என்ன நடந்தது?"

"ஆரஞ்சு ஜுஸ் வெளியில் இருந்து வருகின்றது. சீனாவில் இருக்கும் எனது மகன் இந்த கோடைகால விடுமுறைக்கு அங்கு வரும்படி அழைத்தான். அந்த விமான டிக்கட் மிகவும் மலிவாக இருந்தது. ஆனால், அந்தப் பணத்தில் நமது நாட்டில் உள்ள குயினஸ்லாண்து போக முடியாத நிலைமை உள்ளது" என்றார்.

"உண்மைதான். அவுஸ்திரேலியாவிற்கு நான் வந்து 30 வருடங்களாகிவிட்டது. பார்த்துக் கொண்டிருக்க எல்லாமே விலையேறியது. இங்கு ஒரு இடத்திற்கு செல்வதைவிட அதே பணத்தில் வெளிநாடு செல்ல முடியும். நான்கூட சிலமாதம் முன்பாக குயின்சிலாண்து சென்றேன். அந்த 3 நாட்களுக்கு செலவழித்த பணத்தில், எனது நாடான இலங்கைக்கு செல்ல முடியும். அவுஸ்திரேலியா தற்பொழுது உலகத்திலே எக்ஸ்பென்சிவ் நாடாக மாறியுள்ளது."

"உண்மைதான்."

"டோனால்ட் ட்றம்பின் கூற்றில் உண்மை யிருக்கிறது" என்றபோது அவர் சிரித்தார்.



“நத்தார் வாழ்த்துக்கள்” கூறி விடைபெற்றேன்.

பொருளாதார நிலைமை பொதுவாக மேற்கு நாடுகளில் இன்று இப்படித்தான் உள்ளது. சாதாரண தொழிலாளர்களது வேலைகள் மறைந்துவிட்டன. விவசாயப் பொருட்கள், உடை, உணவு, எலக்ரோனிக் பொருட்கள் மிகவும் குறைந்த விலையில் வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இதனால் நுகர்வோர் குறைந்த விலைகளில் பெற்று நன்மைகள் அடைந்தாலும், உள்ளூரில் பலருக்கு வேலைவாய்ப்பு போய்விட்டது. இதனால், மக்களிடம் அதிருப்தி ஏற்பட்டுள்ளது. இதைப் பல உள்ளூர் அரசியல்வாதிகள் தங்களுக்கு ஏற்றவிதமாக பாவிக்கிறார்கள். திறந்த பொருளாதாரம், முதலாளித்துவம் என்பன தேவனின் கட்டளையாக இருந்தவை. அந்தக் கொள்கைகளுக்கு தற்போதைய நிலை எதிராக இருப்பதால் அரசாங்கத்தில் உள்ளவர்கள் இதைச் சமாளிக்கத் திணறுகிறார்கள். நான் அவுஸ்ரேலியாவுக்கு குடிவந்த எண்பதுகளில் விடயம் எதிர்மாறாக இருந்தது. ஒரு சந்ததியில் எதிர்காற்று வீசுகிறது.

**1987** ஆம் ஆண்டு ஜூன் மாதம் எனது மனைவியும் ஐந்து வயதில் மகனும் மூன்று வயதில் மகளுமாக சிட்னி விமான நிலயத்தில் வந்திறங்கியபோது, எங்களிடம் ஒரு சூட்கேசில் துணிகளும், எனது பொக்கட்டில் அவுஸ்திரேலிய ஐம்பது டொலர் நோட்டும் இருந்தன. மிகக் குறைந்த பொதிகளோடு வந்து இறங்கியபோது விமான நிலையத்திற்கு வெளியே மழை பெய்தது. ஆனால், விமான நிலையத்தின் உள்ளே சீதோஷ்ணம் சூடாக இருந்ததால் குளிர் தெரியவில்லை. பல இனத்தவர்கள் பலவிதமான உடைகளில் அங்கிருந்தார்கள். விமானப் பயணம் ஒரு புது அனுபவம். மனைவி ஏற்கனவே இலங்கையில் இருந்து இந்தியாவுக்கு விமானத்தில் பயணித்திருந்தார். சிங்கப்பூர் வழியாக வந்ததால் மலைப்பில்லாத போதும் புதிய உலகத்தில் சஞ் சரிப்பதாக இருந்தது.

சிட்னியில் இறங்கியதும், வரிசையில் காத்திருந்த எங்களது பாஸ்போட்டைப் பார்த்த அவுஸ்திரேலிய குடிவரவு அதிகாரி, தனது கண்ணாடிக் கூட்டினுள் இருந்துகவனமாகஎமதுஇலங்கைப்பாஸ்போட்டுகளை திருப்பித் திருப்பி பார்த்து, எமது முகத்தையும் உற்றுப் பார்த்து செய்த பரிசோதனையின் பின்பு, “அவுஸ்திரேலியா உங்களை வரவேற்கிறது” என்றார், சிரித்தபடியே. இப்பொழுது பார்த்தால் அது வழமையான அவுஸ்திரேலியரின் நடைமுறை எனத் தெரிந்தாலும்,அன்று நீலசேர்ட்டும் முகக்கண்ணாடியும் அணிந்த அவரது சிரிப்பு சொர்க்கத்திற்கு கதவைத் திறக்கும் பரிசுத்த பீட்டரின் வார்த்தையாக இருந்தது.

விமானம் ஏறிய சென்னை விமான நிலையத்தில் எமது அனுபவம் மிகவும் துன்பகரமான நினைவு. இன்னமும் அந்த ஒரு மணிநேர விசாரணையை மறக்க முடியாது. சித்திரவதை உபகரணங்களைப் பாவிக்காத இன்குசிசன் (Inquisition). எங்களது அவுஸ்திரேலிய விசா கள்ளவிசா என எங்களை இமிக்கிரேசனில் தடுத்து வைத்து பல கேள்விகளைக் கேட்டார்கள்.

“எவ்வளவு காலம் இந்தியாவில் இருக்கிறீரகள்?”




“எந்த இடத்தில் இருந்தீர்கள்?”

“எப்படி இந்த பாஸ்போட்டில் விசா வந்தது?”

“உறவினர்கள் அவுஸ்திரேலியாவில் எங்கிருக்கிறார்கள்?”

எங்களுக்குப் பின்பாக வரிசையில் வந்தவர்கள் எல்லோரும் எம்மை கடந்த போனார்கள். அவ்வாறு கடந்து போனவர்கள், எங்களைப் பின்னால் தள்ளுவதுபோல் உணர்வு. எர் கண்டிசன் இருந்தாலும் வேலை செய்யாதது மாதிரியாக வேர்த்தது. வயிற்றில் சில இரசாயன மாற்றங்கள். இரைச்சலுடன் புறப்படும் ஒவ்வொரு விமானமும் எங்கள் விமானமாக இருக்குமோ என்றொரு எண்ணம். அதைவிட எம்மை ஏற்றிக்கொண்டு சென்றாலும், பஸ் மாதிரி நின்று கொண்டுபோக வேண்டுமோ என்ற சிந்தனை மனதைக் குடைந்தது. இல்லை எனத் தர்க்கித்தாலும் மனதில் மாறும் நினைவுகளுக்கு தடையில்லையே?

குடும்ப உறவினரான மனைவியின் அண்ணரால் அழைக்கப்பட்ட நிரந்தர குடியுரிமையுடன் வருகிறோம் என்றால் அவர்கள் நம்பவில்லை. அது ஒரு இரவு நேரப் பயணமானதால் புது டில்லியில் உள்ள அவுஸ்திரேலிய தூதரகத்திற்குத் தொடர்புகொண்டு கேட்க வழியில்லை. இந்தியாவை விட்டுப்போக நினைத்து வீட்டையும் காலி பண்ணி பொருட்களை எனது நண்பர்களிடம் கொடுத்துவிட்டேன். ஏற்கனவே அண்ணன், தம்பி, பெற்றோர்கள் அவுஸ்திரேலியாவில் இருப்பதால் வர்ணமான கனவுகளுடன் இருந்த மனைவிக்கு ஆத்திரம். அன்றைக்கு அதை என்னில் காட்ட முடியாது. நான் மட்டுமே இமிகிரேசன் ஆபீசருடன் பேசியபடி இருப்பதால் மகளை இடுப்பில் வைத்தபடி அவள் தலையில் கண்ணீரால் ஈரமாக்கினாள். அதைப் பார்த்த மகனுக்கு எதுவும் புரியவில்லை. தாயை பார்த்தபடி நின்றான். மகளுக்கு எதுவும் புரியாத இரண்டு வயது. நான் மனைவியை சமாதானப்படுத்தியபடி இமிகிரேசன் ஆபிசரிடம் தர்க்கம் செய்தபோது விமானம் புறப்படும் நேரமாகிவிட்டது. ஒரு மூலையில் நிற்கச் சொல்லிவிட்டு இதுவரையும் கேள்வி கேட்ட அதிகாரி நகர்ந்துவிட்டார்.

அந்த இடைவெளியில் எந்த வழியால் அவுஸ்திரேலிய விசா உண்மையானது என்று அவர்களை நம்பச் செய்யமுடியும் என்பதை நான் யோசித்துக் கொண்டிருந்தேன். இவர்கள் எங்களை நிறுத்துவதற்கு முடிவு செய்துவிட்டார்கள் என நினைத்திருந்தபோது, இறுதியில் ஒருவர் வந்து எங்களைப் போகலாம் என்றார்.

அந்த சித்திரவதையின் பின்பாக அவர்கள் சொன்ன வார்த்தை ஆறுதலாக இருந்தாலும் ஆத்திரத்தையே அளித்தது. எந்த ஒரு தேவையும் இல்லாமல் ஏன் எங்களை இவர்கள் இப்படிச் செய்யவேண்டும் என்ற கேள்வியுடன் சென்னை இமிக்கிரேசன்காரனைத் திட்டியபடி, அந்த சிங்கப்பூர் விமானம் எங்களை விட்டுப் போய்விடுமோ என்ற அவசரத்தில் சென்றபோது, வாசலில் ஒருவர் மிகுதியான இந்தியப் பணத்தை தன்னிடம் தரும்படி கேட்டார். என்னிடம் சிறிது இந்தியப் பணம் இருந்தது. ஆனால், என்னிடம் இல்லை என வெடுக்கெனச் சொன்னேன். உண்மையில் எங்கோ காட்டவேண்டிய ஆத்திரத்தை யாரிடமோ கட்டியதற்கு பிற்காலத்தில் வெட்கப்பட்டேன்.

விமானத்தில் ஏறி அமர்ந்து ஆர அமர யோசித்தபோது இந்திய இமிகிரேசேன் எங்களுக்கு வைத்த அந்த விசாரணையில் எங்களிடம் போலியான அவுஸ்திரேலிய விசா இருந்திருந்தால் அந்த இடத்தை விட்டு விலகியிருப்போம். ஒருமணிநேரமாக எல்லோரும்




போனபின்பும் எங்களை வைத்திருந்தபோது நாங்களும் சளைக்காமல் தொடர்ச்சியாக நின்றதால் அது உண்மையான விசாதான் என அவர்களை நினைக்க வைத்தது.

அக்காலத்தில் போலி விசாக்களில் இலங்கைத் தமிழர்கள் இந்தியாவில் இருந்து ஐரோப்பாவிற்கும் மற்றைய நாடுகளுக்கும் சென்றார்கள். அக்காலத்தில் எலக்ரோனிக் அல்லது தற்போதைய அவுஸ்திரேலிய பாஸ்போட்டில் உள்ள மைக்கிரோசிப் (Microchip) முறை இருக்கவில்லை. அப்படியாக இருந்திருந்தால் என்ன நிலை என இப்பொழுது திரும்பிப் பார்க்க முடிகிறது.

மறுநாள் காலை சிட்னி விமான நிலையத்தில் எனது மனைவியின் தாய், தந்தை, மனைவியின் அண்ணா மோகன், அண்ணி மாலா ஆகியோர் வரவேற்க வந்திருந்தார்கள். மனைவியைப் பொறுத்தவரை அவர்கள் பலர் பல வருடங்களின் பின்பாக குடும்பத்தில் ஒன்றாகும் சந்தர்ப்பம். நான் ஏற்கனவே மனைவியின் தாயாருடன் இந்தியாவில் மனஸ்தாபப்பட்டவன். அவரைப் பொறுத்தவரை இந்தியாவில் தனது மகளை வைத்து கொடுமைப்படுத்தும் அந்த ஏழுநாட்கள் கணவன் என்பதும், பேரப்பிள்ளைகளையும் இளைய மகளையும் தங்களிடம் இருந்து பிரித்தவன் என்ற பலதரப்பட்ட நல்லெண்ணங்களுடன் இருப்பவர்கள். அவுஸ்திரேலியாவுக்கு நாங்கள் வந்தது அவர்களுக்கு மிகவும் சந்தோசமான விடயம். அவர்கள் மகளைத் தேடி மழைக்கால அட்டை மாதிரி வந்துவிட்டார்கள். (அசோகனின் வைத்தியசாலையில் இந்த மழைக்கால அட்டையாக ஒட்டிக்கொண்டார்கள் என்ற படிமத்தை பாவித்துள்ளேன்).

விமான நிலயத்திற்கு வந்தவர்கள் எங்களுக்குத் தேவையான குளிருடுப்புகளைக் கொண்டு வந்திருந்தார்கள். அவற்றைப் போட்டுக்கொண்டு வெளியே வந்தபோது இரும்புக் கம்பிகளாக மழை, வானத்தை புவியுடன் இணைத்தது. குளிர் என் விரல்கள் மீது ஊசியாகியது. விமான நிலையக் கார் பார்க்கில் இதுவரை பார்க்காத அளவு பலதரப்பட்ட கார்கள் மழையில் குளித்தபபடி நின்றன. கண்ணுக்கு மழை மூட்டமான அந்தக் காலை நேரத்தில் அந்தக் கார்களில் ஒன்றில் எல்லோரும் ஏறிக்கொண்டோம்.

பின் சீட்டில் ஒடுங்கியபடி இருந்தேன். எனது பொக்கட்டில் ஐம்பது டொலர் நோட்டுடன், எனது கையில் வைத்திருந்த பெட்டியில் மிருக வைத்தியர் என்ற கடுதாசியும் இருந்தது. இவைகள்தான் எனது சொத்து. இவற்றைக் கொண்டு எனது குடும்பத்தை கொண்டு செல்லமுடியுமா என சிந்தித்தேன். எனது மனைவியும் படித்தவர். அவளின் உதவியும் பயன்படும் என்ற சிந்தனை எனக்கு அன்று வரவில்லை. ஆண் வர்க்கத்திற்கே உரிய பொறுப்பை ஏற்று நடத்தும் தன்மை என்னிடம் இருந்தது. குடும்பத்தில் மூத்தவனாக பிறந்ததால் எனது குடும்பத்தை சுமார் நான்கு வருடங்கள் பார்த்த நான், இப்பொழுது மற்றவர்கள் தயவில் வாழம் நிலை வந்துவிட்டது என்பது திடீரெனத் தாக்கிய நோயாகத் தெரிந்தது. அதிலும் மனைவியின் உறவினர்கள் தயவில் வாழ்வதா?

எனது எதிர்காலத்தை அன்றைய சிட்னியின் குளிர்கால நிலை பிரதிபலித்தது என எனக்குத் தோன்றியது. எனது சிந்தனையோட்டத்திற்கு ஏற்ற வேகத்துடன் கார் சிட்னியின் மேற்குப் பிரதேசமான துங்காபேயை நோக்கிச் சென்றது. ●

(தொடரும்)

**நடேசன் <uthayam12@gmail.com>**

# சமூகம் எழுதிய கதைகள்

## இயல் விருது ஏற்புரை

**இமையம்**

கோவேறு கழுதைகள் (1994), ஆறுமுகம் (1999), செடல் (2006), எங் கதெ (2015), செல்லாத பணம் (2018) ஆகிய ஐந்து நாவல்களையும் மண்பாரம் (2004), வீடியோ மாரியம்மன் (2008), கொலைச்சேவல் (2013), சாவு சோறு (2014), நறுமணம் (2016), நன்மாறன்கோட்டைக் கதை (2019) ஆகிய ஆறு சிறுகதைத் தொகுப்புகளையும், பெத்தவன் (2012) என்ற நெடுங்கதையையும் இதுவரை நான் எழுதியிருக்கிறேன். இந்த நூல்களை நான் எப்படி எழுதினேன் என்பதைச் சொல்ல வேண்டும் என்பது பலரின் எதிர்பார்ப்பு. அந்த எதிர்பார்ப்பை என்னால் நிறைவேற்ற முடியாது. காரணம், மற்றவர்களின் தேவையை அறிந்துகொடுப்பவன் வியாபாரி. நான் வியாபாரி அல்ல; எழுத்தாளன்.

நான் எழுதியுள்ள ஐந்து நாவல்களும் ஆறு சிறுகதைத் தொகுப்புகளும் ஒரு நெடுங்கதையும் என்னுடைய அறிவின் பலத்தால், சிந்தனையின், கற்பனையின், மதிநுட்பத்தின் பலத்தால் எழுதப்பட்டதில்லை. எழுத்தாளனாகியே தீரவேண்டும் என்ற வேட்கையினாலோ, எழுத்தாளனாகிவிட்டேன் அதனால் தொடர்ந்து எழுதித்தான் தீரவேண்டும் என்ற கட்டாயத்தினாலோ எழுதப்பட்டதல்ல. நடைமுறை சமூகத்தின் நிஜ வாழ்க்கை என்ற கந்தக நெருப்புத்தான் என்னை எழுதத் தூண்டியது. இப்போதும் எழுதத் தூண்டிக்கொண்டிருக்கிறது.



நான் வாழ்கிற நிகழ்கால சமூகத்தை என்னுடைய சொந்த கண்களாலேயே விருப்பு, வெறுப்பின்றி பார்க்கிறேன். மார்க்சிய, பெண்ணிய, தலித்திய, நவீனத்துவ, பின்நவீனத்துவ, இருத்தலியல், சர்ரியலிசம் என்பன போன்ற எந்த கண்ணாடியைப் போட்டுக்கொண்டும் இதுவரை நான் சமூகத்தைப் பார்த்ததில்லை. இனியும் அவ்வாறு பார்க்கப்போவதில்லை. இலக்கியத்தில் சார்பு நிலையைவிட முக்கியமானது நடுநிலைமை. நான் வாழும் சமூகத்தை, உலகத்தை மேலும் மேலும் புரிந்துக்கொள்வதற்கு என்னுடைய எழுத்துக்கள் உதவுகின்றன. நான் எழுத்தை, இலக்கியத்தை கலாச்சார செயல்பாடாகவே கருதுகிறேன். படைப்பின் தரம், வலிமை என்பது அதன் உண்மைத் தன்மையில் இருக்கிறது. படைப்பை படிக்கும் வாசகர்களின் எண்ணிக்கையில் இல்லை.

ஐந்து நாவல்களையும் ஆறு சிறுகதைத் தொகுப்புகளையும், பெத்தவன் நெடுங்கதையையும் எப்படி எழுதினேன் என்பதைவிட, ஏன் எழுதினேன் என்பது முக்கியம். வாழ்வு குறித்து, சமூகம் குறித்து, சிந்திக்க வைப்பதால் எழுதுகிறேன். எழுதுவதால் கூடுதலாக அக்கறைகொண்டு சிந்திக்கிறேன். நான் வாழ்கிற இந்தச் சமூகத்தின் மீது, சமூக உளவியல்மீது, வாழ்க்கை முறைமீது, சமூக நடைமுறைமீது, நீதி நியமங்கள் மீது எனக்குக் கொஞ்சம் கேள்விகளும் விமசர்னங்களும் இருக்கின்றன. இதுதான் என் எழுத்து.

கேள்விகளை எழுப்புவதுதான் என் நோக்கம். தேடுவதும் கண்டடைவதும்தான் எழுத்தின் அடிப்படை. விடையை, முடிவை, தீர்வைத் தருவதல்ல. மனத்தின் உள்தளங்களிலுள்ள கேள்விகளுக்கு, விமர்சனங்களுக்கு எழுத்தின் மூலம் வடிவம் கொடுப்பது, அந்த வடிவத்தை உண்மையின் பலத்தில் நிறுத்துவது. இதுதான் என் எழுத்து. படைப்பு குறித்தும் படைப்புகளுக்காகவும் பேசுவது எழுத்தாளனின் வேலை அல்ல.

ஒரு படைப்பு எழுதி முடிக்கப்பட்டதும், எழுத்தாளனுக்கும் படைப்புக்குமான உறவு முடிந்துவிடுகிறது. என் படைப்பில் எனக்கென்று எந்த இடமுமில்லை. இப்போது நானும் ஒரு வாசகன்தான். என் எழுத்து மௌனத்தை நோக்கி மட்டுமே நகர்த்தும். ஆர்ப்பாட்டத்தை நோக்கி அல்ல.

எல்லா மனிதர்களுக்கும் வாழ்க்கை ஒரே மாதிரியாக ஏன் அமைவதில்லை. எப்படியோ இருக்க வேண்டிய வாழ்க்கை ஏன் சீர்கெட்டு இருக்கிறது. எனக்கும் சகமனிதர்களுக்குமான உறவு எது? பகை எது? ஓயாமல் ஏன் முரண்பாடு ஏற்படுகிறது? நான் என்பது என்ன? உலகம் என்பது என்ன? உலகம் என்பது ஒன்றுமில்லை, வாழ்க்கை என்பது ஒன்றுமில்லை, நான் என்பது ஒன்றுமில்லை; எல்லாம் அபத்தம் என்று சொல்வது எதனால்? இவ்வளவு மதங்களுக்கும் மதப் போதகர்களுக்கும் பின்னால், சமூக ஒழுக்க அறநெறியாளர்கள் வந்த பிறகும் உலகம் ஏன் இப்படி இருக்கிறது? சமூகமும் வாழ்க்கை முறையும் ஏன் நெறிமுறைகளற்று இருக்கின்றன? காலந்தோறும் புறக்கணிப்புகள், ஒதுக்குதல், பாரபட்சங்கள், பொருளாதார உழைப்பு, சுரண்டல்கள் ஏன் நிகழ்ந்து வருகின்றன? வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கு எவையெல்லாம் அவசியம்? மனித தேவைகளின் முடிவு எது? பண்பாடு என்பது என்ன? மரபு என்பது என்ன? நிஜமான சந்தோஷம், நிஜமான துக்கம் எது?



நெருப்பாகச் சுட்டுப் பொசுக்கும் நெருக்கடிகளுக்கு இடையிலும் சாகசத்தோடு வாழ்வை மனிதர்கள் எப்படி எதிர்கொள்கிறார்கள்? மனித இனத்தைத் தொடர்ந்து முன்னோக்கி நகர்த்தும் சக்தி எது? இப்படி ஆயிரமாயிரம் கேள்விகள். இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடையல்ல, முடிவல்ல, தீர்வல்ல என் எழுத்து.

நான் பிறந்து வளர்ந்த ஊர், அந்த ஊருக்குரிய மனிதர்கள், அவர்களுடைய வாழ்க்கை முறை, அந்த ஊருக்குரிய சட்டதிட்டங்கள், ஒழுக்க முறைகள், அறங்கள், நீதி நியமங்கள், நம்பிக்கைகள், நடைமுறைகள் இதுதான் என் வாழ்க்கை. இதுதான் என்னுடைய படைப்புலகம்.

என்னுடைய பாத்திரங்கள் பெரியளவில் சிந்திப்பவர்களோ போராடுபவர்களோ அல்ல. நிலம் சார்ந்தவர்கள். உழைப்பு சார்ந்தவர்கள். ஓயாமல் மண்ணோடும் இயற்கையோடும் போராடுகிறவர்கள். உழைப்புதான் அவர்களுடைய பலம். அதுதான் அவர்களை இயற்கையுடன் மோத வைக்கிறது. பெரிய ஆசை கொண்டவர்களோ, கனவுகள், லட்சியங்கள், எதிர்பார்ப்பு கொண்டவர்களோ அல்ல. பசியைத் தீர்ப்பதற்கான வழியைத் தேடுவதுதான் அவர்களுடைய வாழக்கையாக இருக்கிறது. வாழ்நாளெல்லாம் வாயையும் வயிற்றையும் நிரப்புவதற்காக போராடுபவர்கள். போராட்டத்தில் ஓயாமல் தோற்றுக்கொண்டே இருப்பவர்கள்.

என்னுடைய மனிதர்களுக்கு கனவுகள்கூட வருவதில்லை. மீறி வந்தாலும் வயிறு நிறைய சாப்பிட்டதுபோலவே கனவு காண்பவர்கள். காரணம் வயிறுதான் அவர்களுக்கு வாழ்க்கை. வாழ்க்கையை அது அமையும் விதமாகவே வாழ்ந்துவிட்டுப் போகிறவர்கள். அவர்களைப் போலவே அவர்களுடைய தேவைகளும் ஆசைகளும் எளிமையானவையே. ஆடு இரண்டு குட்டி போட வேண்டும், மாடு கன்று ஈன வேண்டும், பன்றி குட்டி போட வேண்டும், அதைக்கொண்டு, அதை விற்று நல்லது கெட்டது செய்ய வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக மழை பொழிய வேண்டும்; காடு விளைய வேண்டும். இதுதான் அவர்களுடைய பேராவல். அவர்களுடைய அதிகபட்சப் பிரார்த்தனை. வயிற்றுக்குச் சோறும் மானத்தை மறைக்கக் கொஞ்சம் துணியும் வேண்டும். அவ்வளவுதான். இதற்கு மேலான மனிதத் தேவைகளின் அவசியம் என்ன? தமிழ்ச் சமூகம், இந்திய சமூகம் கட்டமைத்து வைத்திருக்கும் ஒழுக்கப் பண்புகளோ, அறப்பண்புகளோ இல்லாதவர்கள். சமூகத்தின் கேலிக்கும் கிண்டலுக்கும், ஏளனத்திற்கும் ஆளான மனிதர்கள். சமூகத்தின் இழிவு சின்னங்களாக சித்தரிக்கப்பட்டவர்கள் எப்படி தமிழ் சமூகம் மதிக்கும் கதையானார்கள்? தமிழ் வாழ்வின் மாதிரியானார்கள்?

என் மூளையிலிருந்து உருவானவர்கள் என்று என் எழுத்தில் எவரும் இல்லை. என்னுடைய பாத்திரங்கள் இன்றும் என் கண்முன்னே நடமாடிக்கொண்டிருப்பவர்கள்தான். வாழக்கையிலிருந்து விலகியதோ அந்நியப்பட்டதோ அல்ல இலக்கியம்.

பாலியல் தொழிலாளி ஆவதுதான் என் வாழ்வின் லட்சியம், கனவு என்று சொன்ன பெண்

**நான் இதுவரை எழுதியிருப்பது ‘அன்பாக இருக்க பழகு, அன்பாக இருப்பது எப்படி’ - என்பதைத்தான். அதையும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு எளிமையாக, வெல்ல முடியாத எளிமையின் வலிமையில் எழுதியிருக்கிறேன் என்றே நம்புகிறேன்.**

*யார்? ஆசைப்படாதபோதும் விரும்பாதபோதும் எப்படி பெண்கள் பாலியல் தொழிலாளிகளாக மாற்றப்பட்டுக்கொண்டே இருக்கிறார்கள்? இது யாருடைய விருப்பத் தேர்வு? சாதி சார்ந்த ஒழுக்கம், சமயம் சார்ந்த ஒழுக்கம், சமூகம் சார்ந்த ஒழுக்கம், கலாச்சார பண்பாட்டு விழுமியங்கள், பெருமைகள் அனைத்தும் ஏன் பெண்ணை மையமாகக்கொண்டே உருவாக்கப்பட்டுள்ளன? உருவாக்கப்படுகின்றன? ‘பெத்தவன்’ கதையில் வரும் பாக்கியம் - அவளுடைய காதலை பல ஊர் பேசுகிறது. பல ஊர் பஞ்சாயத்து பேசுகிறது. சாதி பேசுகிறது. கட்சி பேசுகிறது. பாக்கியத்தின் காதலை - வாழ்வை யார் தீர்மானிக்கிறார்கள்? பஸ் ஏற போன பாக்கியம் தன் காதலனுடன் போய் சேர்ந்தாளா? வழியிலேயே கொலை செய்யப்பட்டாளா? தெரியாது.*

*என்னுடைய கதை மனிதர்கள், தங்களுக்கு விதித்த வாழ்க்கையை முகச்சுளிப்பு இல்லாமல் ஏற்றுக்கொண்டவர்கள். தங்களுடைய வாழ்க்கையை மற்றவர்கள் - அதாவது சமூகம் ஏன் தீர்மானித்தது என்று ஒருபோதும் கேள்வி கேட்காதவர்கள். ஆனால், விதிக்கப்பட்ட வாழ்க்கையை அவ்வளவு விருப்பத்துடன், அவ்வளவு ஈடுபாட்டுடன் - முழு அர்த்தத்தோடு வாழ்ந்தவர்கள். தாங்கள் வாழ்வது இழிவானது என்றோ, கேவலமானது என்றோ வெறுப்புடன் அவர்கள் ஒருபோதும் - வாழ்க்கையை குறை கூறியதில்லை. குற்றம் சாட்டியதில்லை. ஆசை கொண்ட மனங்களுக்குத்தான் இக்குணங்கள் இருக்கும். என்னுடைய கதை மனிதர்கள் அவர்களுடைய வாழ்க்கையை வாழ்ந்தார்கள். அவர்களுடைய மொழியைப் பேசினார்கள். தாங்கள் வாழ்ந்த வாழ்க்கையை என்னிடம் கண்ணீராகவும் சொற்களாகவும் ஒப்பாரிப் பாடலாகவும் தந்தார்கள். அதைத்தான் நான் நாவல்களாகவும் சிறுகதைகளாகவும் தந்திருக்கிறேன்.*

*என்னுடைய கதைகளில் வரும் மனிதர்கள் சமூகத்தின் நடப்புகளாக, சமூகத்தின் நிகழ்வுகளாக இருந்தவர்கள். இவர்கள்தான் தமிழ் சமூகம் குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட இடத்தில் எப்படி வாழ்ந்தது என்பதற்கான சாட்சிகள். தமிழ்ச் சமூகம் வாழ்ந்ததற்கான சாட்சிகளையே நான் உருவாக்கி இருக்கிறேன். எது இலக்கியம், யார் எழுத்தாளன் என்பதை இந்த சமூக அசைவியக்க சாட்சிகள்தான் நிர்ணயிக்கிறார்கள். என்னுடைய மனிதர்கள் கேட்பது பணமல்ல, நகை அல்ல, பங்களா, கார், அதிகாரம், காமம் அல்ல. சோறு. அதைத்தான் சமூகம் தர மறுத்திருக்கிறது. அதற்காகத்தான் போராடுகிறார்கள்.*

*ஒரு பெண்ணின் கதையை, ஒரு குடும்பத்தின் கதையை எதற்காக எழுத வேண்டும்? யாரும் வாழாத வாழ்க்கையையா அவர்கள் வாழ்ந்தார்கள்? ஒரு மனிதனின் கதைக்கும் ஒரு குடும்பத்தின் கதைக்கும் வரலாற்றில் எந்த முக்கியத்துவமும் இல்லை. மாறாக ஒரு சமூகத்தின் கதையை எழுதவேண்டும். அதுதான் ஒரு இடத்தின் வாழ்வு - ஒரு காலத்தின் வாழ்வு.*

*ஒரு கதையை ஏன் எழுதுகிறேன் என்றால் - குறிப்பிட்ட நிலவியலை பதிவு செய்வதற்காக - ஒரு குறிப்பிட்ட காலத்தில் - சமூகம் எப்படியிருந்தது - என்பதை சொல்லவே.*

*ஒரு நிலப்பரப்பை, குறிப்பிட்ட காலத்தை, அக்கால சமூக நடவடிக்கையை சொற்களின் வழியாக மொழிக்குள் சேமித்து வைக்க - ஆரோக்கியம், செடல், கமலா, பாக்கியம், தனபாக்கியம், ரேவதி போன்றவர்கள் எனக்கு உதவினார்கள். வழிகாட்டியாக, கண்ணாடியாக இருந்தார்கள்.*

*கதாபாத்திரங்களின் குண இயல்புகளுக்குள், மொழிக்குள் என்னை நான் ஒரு போதும் திணித்துக்கொள்வதில்லை.*

*என்னுடைய பாத்திரங்களின் மீது எனக்குத் தனிப்பட்ட ஈர்ப்பு எதுவும் கிடையாது. வாழ்க்கையை அதன் நிறைகுறைகளோடு நெருக்கமாக, அதே நேரத்தில் விலகி நின்று எழுத்தாளன் பார்க்க வேண்டும். சூழலை நான் தன்னிச்சையாக எதிர்கொள்ள விரும்புகிறேன். கட்டுப்பாடுகள், எல்லைக்கோடுகள், வரையறைகள், கோட்பாடுகள், இசங்கள் அனைத்தும் படைப்பை ஊனப்படுத்தவே செய்யும். இவை எதுவும் எனக்கோ என் எழுத்திற்கோ இல்லை.*

*மனித உறவின் மையத்தை மட்டுமே இலக்கியம் பேச வேண்டும். குறைந்த வார்த்தைகளில், முடிந்தால் வார்த்தைகள் இல்லாமல். அது எல்லாவிதமான வாசிப்புகளுக்கும் இடமளிக்க வேண்டும். வாழ்க்கை தந்த சொற்களும், சொற்கள் உருவாக்கிய வாழ்க்கையும்தான் என் எழுத்து.*

*நிஜ வாழ்க்கை என்பது கடலைப் போன்றது. கோட்பாடுகள் என்பது கடலில் அவ்வப்போது வந்து போகும் கப்பல்களைப் போன்றது. என்னுடைய எழுத்துக்கள் கப்பல்களைப் பார்த்து எழுதப்பட்டதல்ல. கடலைப் பார்த்தும் கடலுக்குள்ளிருந்தும் எழுதப்பட்டது. நான் வாழும் சமூகத்தின் வரைபடத்தை, நான் வாழும் இடத்தின், காலத்தின், நிலவியல் பண்பாட்டின் வரைபடத்தை உருவாக்கிக் காட்ட முயல்வதே என்னுடைய எழுத்தின் முயற்சிகள்.*

*மனித இனம் தோன்றி சிந்திக்கவும், பேசவும், எழுதவும், போதிக்கவும் ஆரம்பித்த காலத்திலிருந்து இன்றுவரை, அதிகமாகப் பேசப்பட்ட விஷயம்,*



அதிகமாக சிந்திக்கப்பட்ட, போதிக்கப்பட்ட விஷயம், எழுதப்பட்ட விஷயம் - 'அன்பாக இருக்க பழகு' என்பதும், 'அன்பாக இருப்பது எப்படி' என்பதும்தான். ஆனால், மனித மிருகம் இதுவரை கற்றுக்கொள்ளாத, கற்றுக்கொள்ள விரும்பாத, பின்பற்றாத, பின்பற்ற விரும்பாத விஷயங்களும் இவைதான். நான் இதுவரை எழுதியிருப்பது 'அன்பாக இருக்க பழகு, அன்பாக இருப்பது எப்படி' - என்பதைத்தான். அதையும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு எளிமையாக, வெல்ல முடியாத எளிமையின் வலிமையில் எழுதியிருக்கிறேன் என்றே நம்புகிறேன்.

என் எழுத்தின் நோக்கம் மனித வாழ்வின் அத்தனை மேன்மைகளையும் இழிவுகளையும், இயற்கையின் முன் மனிதன் தோற்றுப்போகும் கணங்களையும், வாழ்வின் வெற்றுத் தன்மையையும் புரிந்துகொள்வதற்கான முயற்சியே. வாழ்க்கை வாழப்படுகிற விதத்தில், வாழ்க்கை அமைகிற விதத்திலிருந்து வாழ்வு குறித்தும் சமூகம் குறித்தும் வாசகனோடு சேர்ந்து கொஞ்சம் கேள்விகளை எழுப்புவதே என் எழுத்து. அப்படி எழுந்த பல கேள்விகளுக்கான பதில்கள்தான் என்னுடைய நாவல்களும் சிறுகதைகளும். நான் எழுதிய ஐந்து நாவல்களும், ஆறு சிறுகதைத் தொகுப்புகளும், ஒரு நெடுங்கதையும், நான் எழுதியவை அல்ல. சமூகம் எழுதிய நாவல்கள், சமூகம் எழுதிய சிறுகதைகள்தான். நான் எழுத்தில் எதையாவது சாதித்திருக்கிறேனா என்று கேட்டால் எதுவுமில்லை என்பதுதான் என்னுடைய பதில்.

தொல்காப்பியர், திருவள்ளுவர், கம்பர், திருமூலர், இளங்கோவடிகள், ஔவையார், ஆண்டாள், அப்பர், சம்பந்தர், திருநாவுக்கரசர், சங்க காலப் புலவர்கள், சித்தர்கள், இராமலிங்க அடிகள், பாரதி, பாரதிதாசன் போன்றவர்கள் சாதிக்காததையா நான் சாதிக்கப்போகிறேன்? இந்தப் பட்டியலில் உள்ளவர்களும் விடுபட்டவர்களும், ஒவ்வொருவரும் ஒரு பெரும் கடல். நான் ஒவ்வொரு கடற்கரையிலும் நின்று வேடிக்கை பார்க்க மட்டுமே செய்கிறவன். கடலை வெல்ல இலக்கு, ஆசை இருக்க முடியுமா? அது முடிகிற காரியமும் இல்லை. கடலை அறிவதற்கான ஆசை மட்டுமே இருக்கிறது. இதுவே பெரிய ஆசைதான். பெரிய இலக்குதான். ●

**இமையம் <imayam.annamalai@gmail.com>**

# பிறகு மழை பெய்தது

பொ. கருணாகரமூர்த்தி
ஓவியம்: ஜீனே சோகியோகா

விஷாகனின் பணியிடத்தில் ஒன்றாக பணிபுரிபவரும் நெடுநாள் நண்பருமான ஒருவரின் மகனது 18ஆவது பிறந்தநாள் விருந்து ஆடம்பரமாக அந்த ஹொட்டலில் நடந்து கொண்டிருந்தது. அவ்விருந்துக்கு வருவான் என வசீகரன் எதிபார்த்திருந்தவன் மகிழுந்தை நிறுத்துமிடத்தில் வைத்துவிட்டு அரங்கினுள் நிதானமாக நுழைந்தான். வசீகரன் சற்றுத் தூரத்தில் நின்ற இன்னொருவனை 'உவன்தானா' என்று உறுதிப்படுத்துமுகமாக சைகையால் கேட்டான். அவனும் 'ஆம்' என்பதாகத் தலை அசைக்கவும், புலியைப்போல் துல்லியமாய் விரைந்து அடியெடுத்துப்போய் அவனின் அருகில் நின்று, பிளேசருக்குள் மறைத்து வைத்திருந்த கிறிஸ் கத்தியை எடுத்து, பலாப்பழத்திற் செருகுவதைப்போல் அவனது பளுவில் நிதானமாகச் செருகினான்.

குத்தை வாங்கியவனுக்கு நடந்ததென்னவென்றே தெரியவில்லை. அவனுக்குத் பளுவில் ஒரு தேனீ கொட்டியதைப்போலவும் பின் அதே இடத்தில் யாரோ பலமாக அடித்ததைப்போலவும் இருந்தது. மேலும் இரண்டு அடிகளை எடுத்துவைத்தவன் மூன்றாவது அடியைவைக்க முடியாதபடி உடலின் சமநிலை குலையவும், தடுமாறிக் குப்புறசொருகுப்பட்ட கத்தியுடன் விழுந்தான். விழுந்தபின்னாலேயே குத்துவாயிலிருந்து குருதி வந்தது. இதுகண்ட விருந்தினரில் பாதிப்பேர் வாயடைத்து உறைந்துபோயிருந்தனர். சுதாகரித்துக்கொண்ட பெண்கள்போட்ட கூச்சலிலும் மீதிச்சனம் பட்ட அம்முலோதியிலும் அரங்கத்தின் பாதுகாப்பு ஊழியர்கள் ஓடிவந்தனர். அடுத்த ஐந்தாவது மணித்துளியில் காவல்துறையினரும் உயிரணிகத்தினரும் (ஆம்புலன்ஸ்) ஒருசேர வந்தனர். குத்தப்பட்டவரைத் தூக்கி வைத்துக்கொண்டு உயிரணிகம் மருத்துவமனையை நோக்கி விரைய காவல்துறை வசீகரனுக்கு விலங்குபோட்டு அழைத்துப்போனது.



முரண்நகை எதுவெனில் விருந்தை நடத்தியவர்களுக்கோ விருந்தினர்களுக்கோ குத்தினவன் யாரென்றோ, குத்தப்பட்டவன் யாரென்றோ, எதுக்கான குத்துப்பாடு, எதுக்காக இங்கே என்றெதுவுந் தெரியவில்லை. தமிழர்களின் பிறந்த நாள், திருமணம், பூப்புனித நீராட்டு விழாக்களில் இவ்வாறான கத்திக் குத்துபோன்ற வம்பு வல்லடிகள் பெர்லினில் இதுவரை நிகழாத அதிசயமாதலால் இச்சம்பவம் அனைத்துக் காட்சியூடகங்களிலும் பத்திரிகைகளிலும் பரபரப்பான இடத்தைப் பிடித்துக்கொண்டது. பல பத்திரிகைகள் கொலை முயற்சிக்கான காரணங்களை அனுமானமாகவும் எதிர்வுகூறலாகவும் சலம்பலாயின. சில ஊடகங்கள் போதை வஸ்து வியாபாரத்தில் எழுந்த பிணக்கு என்றன. சில இருவருக்குமிடையே உள்ள 25 வயது வித்தியாசத்தைக்கூடக் கணக்கில் எடுக்காமல் ஒரு பெண்ணை அடைவதில் எழுந்த போட்டி என்றன. இது வெளிநாட்டவர் சம்பந்தப்பட்ட நிகழ்வுதானே, விரைவிலேயே ஊடகங்கள் அதை மறந்தும்போயின.

80களில் இலங்கைத் தமிழ் இளைஞர்கள் ஐரோப்பிய நாடுகளுள் நுழைவதற்கு பல வழிகளைத் தந்திரமாகக் கையாண்டனர். அப்போது கிழக்கு ஜெர்மனிக்கான விஸாவை இலங்கையிலேய எடுத்துக்கொண்டு விடலாம். அதோடு நேரடியாக கிழக்கு பெர்லினில் வந்திறங்கி அங்கிருந்து டென்மார்க் அல்லது நோர்வே, சுவீடென் திசையில் போகும் தொடரிகளில் ஏறிக்கொண்டு, அவை மேற்கு ஜெர்மனியின் நகரங்களில் நிறுத்தப்படும்போது, அங்கங்கே பயணப்பொதியுடன் இறங்கிவிடுவது. இவ்விலகுவான வழிகளில் தினமும் தமிழர்கள், பாகிஸ்தானியர், பங்களாதேஷிகள், நூற்றுக்கணக்கில் வந்திறங்கவும் இவர்களின் வரவுகள் கண்காணிக்கப்பட்டுக் கைது செய்யப்பட்டனர். கைதின்போது அரசியல் தஞ்சம் கோருபவர்களுக்கு சிலவார வதிவு அனுமதி தந்து வெளியில் உலவவிடப்படுவர்.

10 நொவெம்பர் 1989இல் கிழக்கு / மேற்கு ஜெர்மனிகளுக்கு இடையேயான பிரிசுவர் விழுந்ததும், கிழக்கு ஜெர்மனியென்று ஒன்று இல்லாமலாக, கிழக்கு ஜெர்மனிக்கென வழங்கப்பட்ட தனியான விஸாவும் இல்லாமற்போனது. பயண முகவர்கள் சும்மா இருப்பார்களா, வேறு உபாயங்களையும் தந்திரங்களையும் நுட்பமாகப் பரிசீலித்தனர். கடவுச் சீட்டுகளில் தலைகளை மாற்றி ஒட்டுவதைவிடவும் இவ்வழிக்கு அதிக தொழில்நுட்பம் பயன்படுத்தப்பட வேண்டியிருந்தது. வார்ஷோ, கிறீமியா, ஷோபியா பலகலைக்கழகங்களில் கல்வி பயில அனுமதி கிடைத்ததுபோலப் பத்திரங்கள் தயாரித்துக்கொண்டு, அந்த நாடுகளின் விஸாக்களை இலங்கையிலேயே பெற்றுக்கொண்டு, மாணவர்கள் பாவனையில் பயணிகள் வந்திறங்கியதும் அவர்களை பல்கேரியா, செக்கோஸ்லோவாகியா, போலந்தினூடாக ஜெர்மனிக்குள் Dresden, Chemnitz நகரங்களுக்குச் செல்லும் வாகனங்களில் ஜெர்மனிக்குட் தள்ளுவது. பாதைகளில் எதுவும் விக்கினங்களென்றால், சிலருக்கு இரவு நேரங்களில் கால்நடையாக 40, 50 கி.மீட்டர்கள் நடந்துகூட ஜெர்மனிக்குள் நுழைய நேர்ந்திருக்கிறது.



வேறும் சிலருக்கு ஒரு வாகனத்தில் ஒரு குறிப்பிட்ட எல்லைவரை பயணித்து, பின் வாகனங்கள் மாறி வேறு வாகனங்களில் ஏறிக்கொண்டு காடுகளுக்குள் இறங்கி, ஆற்றங்கரையோரமாகவும் மண்டிய புதர்களூடாகவும் சதுப்புச் சேறுகளூடாகவும் எல்லைகளை நோக்கி நடந்து கடந்தவர்களுமுண்டு. பனிக்காலத்தில் எல்லை கடக்க முயன்ற சிலர், பனிச்சேற்றில் புதையுண்டும் ஆற்றோடு அள்ளுப்பட்டும், காணாமற்போன சம்பவங்களும் நடந்துள்ளன.

ஜெர்மனியில், குறிப்பாக பெர்லின், ஹொட்டல்களின் துணிகளைச் சலவை செய்வது, போலந்தின் சலவைக் குழுமங்களால் ஒப்பந்தம் செய்யப்பட்டு போலந்துக்கு எடுத்து வரப்பட்டு, சலவையானதும் தினமும் சுறுசுறுப்புடன் திருப்பியேற்றப்படுகின்றன. இவ்வாறு தினசரி சென்றுவரும் வாகனங்களில் எவருக்கும் சந்தேகமில்லாமல் ஆட்களைக் கடத்திவிடுவதும் ஒரு வழி.

கம்பன் என்கிற இவ்விளம் முகவரினால், ஜெர்மனிக்குள் நுழைவதற்காக மொஸ்கோ தொட்டு வந்தவொரு விமானத்தில் ஒரு மாணவியாக வார்ஷோவில் வந்திறங்கினேன். அன்றைக்கே தொடரிமூலம் 3 ஆண்களும் 2 பெண்களுமாக Wroclaw எனும் இடத்துக்கு வந்தோம்.

மேற்கு போலந்தின் Wroclaw இப்புராதன நகரத்தைக் காரணத்துடந்தான் முகவர்கள் தேர்வுசெய்தனர். இதிலிருந்து 270 கிமீ, 300 கிமீ தொலைவில்தான் Dresden, Chemnitz ஆகிய மே.ஜெர்மனியின் நகரங்கள் இருக்கின்றன. இன்னும் Wroclaw கட்டிடக் கலைகளுக்கு மிகவும் பெயர்போனது, அங்குள்ள St.Elezebeth's Church உலகப் பிரசித்தம். நகரத்தின் அழகைத் தரிசிக்கவும் அங்கிருந்து உற்பத்தியாகும் Oder என்னும் ஆற்றின் அழகைக் காணவும் உலகெங்கிலுமிருந்து உல்லாசப் பயணிகள் வந்தவண்ணமிருப்பர். ஆதலால், கறுத்தத்தலைகள் மற்றவர்களினதோ காவல்துறையின் கவனத்தையோ அத்தனை ஈர்க்காது.

இவ் Wroclaw விலிருந்தும் 10 கிமீ வரையில் ஒதுக்குப்புறமாய் அமைந்திருந்தது நாமிருந்த அந்த Krzyki என்கிற கிராமம். அங்கே மொத்தமும் 15 / 20 வீடுகள்தான் இருக்கும். அந்தப் பழைய வீடு பிரதான சாலையிலிருந்து Krzyki நோக்கிக் கிளைக்கும் ஒரு சிறுவீதியில் அமைந்திருந்தது. அவ்விடத்தை ஊடறுக்கும் பெருஞ்சாலையிலேயே எப்போதாவது சில பாரவுந்துகள் கடந்துபோகும். மற்றும் படி பேருந்து, சிற்றுந்து மகிழுந்துகளையே காண நேருவது அரிது.

அந்த வீட்டில் பெரியதும் சிறியதுமாய் இரண்டு அறைகளும் அவை இரண்டுக்கும் பொதுவான ஒரு ஒடுங்கலான ஓடி / இடைகழியும் இருந்தது. நடையின் முடிவில் குளியலறை. பெரிய அறையில் இரண்டு இரும்புக்கட்டில்போடப்பட்டிருந்தன. சிறிய அறையில் ஒரு இரும்புக் கட்டிலும் ஆட்கள் மேலதிகமாகத் தங்க நேர்ந்தால் படுப்பதற்கு இரண்டு மெத்தைகளும்

இருந்தன. தனியான சமையலறை கிடையாது. ஆகையால், பெரிய அறையிலேயே காஸ் அடுப்பு வைத்துச் சமைத்தோம். அவ்வறையுள்ளே கழுவுந் தொட்டியோ,தண்ணீர்க்குழாயோ இல்லை.குளியலறை யிலே பாத்திரங்களையெல்லாம் கழுவினோம். அவ்வீடு இரண்டாம் உலகமகா யுத்தத்தின்போது ரஷ்ய சிப்பாய்களுக்காக கட்டப்பட்டவை என்றார்கள்.

சமூக வலைத்தளங்கள் எதுவுமில்லாத அக்காலத்தில், அங்கே யாரைப் பிடித்து எப்படித்தான் கம்பன் அவ்வீட்டைப் பிடித்தானோ தெரியவில்லை. ஆள் வலு சுழியன். அவனுக்கு அவ்வூரிலும் சிலரைப் பழக்கமிருந்தது. அப்பழக்கத்தால் அவர்களின் சிற்றுந்திலேயே வாரம் ஒரு முறை எங்கேயோ போய் கோதுமை மா, பால், தயிர், வெண்ணெய்க் கட்டிகள், பாண், ஜாம், உருளைக் கிழங்கு, மைசூர் பருப்பு, வெங்காயம்,போஞ்சி,அவரை,தக்காளி என்பனவற்றை வாங்கிவருவான்.மிளகாய்,நற்சீரகம் மல்லியன்ன வெஞ் சனங்கள்தான் அரிய பொருட்களாயிருக்க Meerrettich (Horseradish) ஐயும் மிளகையுமே காரத்துக்குப் பாவித்து சாப்பாடென்று ஏதேதோவெல்லாம் பண்ணியுண்டு உயிர் தரித்தோம்.

நான் அங்கே இருந்த நேரத்தில் கம்பனுட்பட மொத்தமாக எட்டு பேர் அதில் தங்கினோம். அநாவசியமாக வீட்டைவிட்டு எவரும் வெளியே திரிய வேண்டாமென்றும், அப்படி ஏதாவது தேவைக்காகப் போக நேர்ந்தால் மாணவர்களைப்போல இரண்டு புத்தகத்தையோ கோப்புக்களையோ கையில் எடுத்துப்போகும்படியும், கம்பன் கண்டிப்பாகச் சொல்லியிருந்தான். வீணாக வெளியேபோய் ஏதாவது கோக்குமாக்குகளில் மாட்டிக்கொண்டால், அது அவர்களின் தொழிலுக்குப் பின்னடைவென்றும், நாறடித்துவிடும் என்றும் எச்சரிக்கையில், காவல்துறையினரோ வேறு அதிகாரிகளோ எம்மிடம் ஏதாவது விசாரிக்க நேர்ந்தால், எப்படிப் பதில்கள் சொல்லவெண்டுமென்று பயிற்சிகளும் தரப்பட்டிருந்தது.

ஒருமுறை நாங்கள் சேர்ந்து அங்கிருக்கும் ஒரு அருவிக் கரையோரம் நடக்கப்போனபோது கம்பன் தன்னைப் பற்றியும் குடும்பம் பற்றியும் கொஞ் சம்போலத் தெரியப்படுத்தினான். திருமணமாகாத தன் மூத்த, இளைய இரண்டு சகோதரிகளுக்கும் வாழ்க்கை வாங்க வேண்டுமென்றும், கச்சேரியில் அரச அதிபரின் அலுவலகத்தில் நேர்மையான சிற்றூழியராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற அப்பாவின் ஓய்வூதியத்தில்தான் குடும்பம் நெருக்கடியுடன் நகருவதாகவும் சொன்னான்.

அவனது அப்பா வீட்டின் வறுமைநிலை காரணமாக பத்தாவது படிக்கும்போதே கச்சேரியில் சிற்றூழியராக சேர்வதற்கு விண்ணப்பித்தாராம். போட்டியில்லாமல் அவ்வூழியம் கிடைத்துவிடவே அதில் சேர்ந்துவிட்டாராம். பத்தாவது கணிதத்தில் சித்தியெய்தாமப்போனதில் 27 ஆண்டுகால அரசு ஊழியத்தின் பின்னரும் சிற்றூழியராகவே ஓய்வுபெற்றாராம்

கம்பன் என்கிற அவன் பெயர் வித்தியாசமா யிருப்பதைக் கண்டு, ‘உங்கப்பா பெரிய இலக்கிய ரசிகரோ’ என்றதுக்கு, “எங்கப்பா பள்ளி நூலகத்தில் அமயகால நூலகராகவும் பணி செய்திருக்கிறார். அப்போதெல்லாம் அங்கிருந்து நிறையப் புத்தகங்களை எடுத்துவந்து வாசிக்கும் பழக்கமும் அவருக்கு இருந்தது. ஆனால், தனக்கு இலக்கிய ரசனை இருக்கிறது அல்லது இல்லாமலிருக்கிறது அதைப் பத்தியெல்லாம் எங்ககூடப் பேசமாட்டார். அத்தோட எங்களுடன் என்றைக்குமே இலக்கியச் சண்டிகளும் பண்ணியதில்லை” என்றான்.

தனக்கு, இயக்கமொன்றினால், இரண்டொரு ஆண்டுகளில் தமிழீழம் கிடைத்துவிடும் என்பதுபோல மதியூட்டப்பட்டதால், அதிலே ஓடிப்போய் தான் இணைந்ததாகவும், இணைந்த ஆண்டிலேயே பண வசூலிப்பு போன்ற அதன் எல்லாக் கிரியைகளோடும் உடன்பட முடியாமல் விலக விரும்பியபோது அவ்இயக்கம் தனக்குத் தண்டனையாக 9 மாதங்கள் யாழ் கோட்டையை இடிக்க வைத்தே விடுதலை செய்ததாகவும் சொன்னான். மாணவர் விசாவில் மொஸ்கோ வந்தவன், அங்கிருந்து இடர்கழி (றிஸ்க்) நிறைந்த, ஆனால் அறத்துக்கு முரண் இல்லை என்று நம்பிய ஒரு வழியில், பணம் சம்பாதிக்க விழைந்து கொண்டிருந்தான்.

இரண்டு ஆண்டுகள் கஷ்டப்பட்டு உழைத்த பணத்தில் இராசவீதியில் வீடொன்றை வாங்கியதாகவும், செலுத்த வேண்டிய மீதிப்பணம் 25 இலட்சத்துக்கு விற்றவர்களிடமே அவ்வீட்டை ஈடு வைத்திருப்பதாகவும், விரைந்து அதைமீட்க வேண்டுமென்றும் சொன்னான். இயக்கத்தில் இருந்தபடியாலாக்கும் எந்தக் குளிர்நாளிலும் தூக்கத் திலிருந்து நேரத்துக்கு எழுவது, தேகப்பியாசம் செய்வதென்று அவன் செயற்பாடுகளில் அனைத்திலும் ஒரு ஒழுங்கும் ஆவர்த்தனமும் நேர்த்தியும் இருந்தன.

‘எந்தளவுக்கு வேகமாக பயணிகளை ரஷ்யாவில், போலந்தில் தேங்கவிடாமல் குழல்பிட்டு மாதிரி தள்ளி வெளியே அனுப்பி வைக்கிறேனோ அந்தளவுக்கு நல்லது’ என்றான்.

“ஏன் பயணிகள் தங்கினால் உங்களுக்குச் சாப்பாட்டுச் செலவு எகிறிவிடுமோ” என்றேன் புரியாதவள்போல. (அப்போதெல்லாம் பேச்சு நீங்கள், நாங்கள்தான்).

“இல்லை, உங்கள் கோடெக்ஸ் செலவு எகிறிடும்” என்றான்.

நான், அவன் பளுவில் கிள்ளிக் கூச்சம் காட்டவும் தெறிவினைபோல் அவனும் என் முலையில் அமுக்கிக் ‘ஹோர்ண்’ அடித்தான். என் உடலின் குருதிமண்டலம் முழுவதும் குருதி சீறிப் பாய்ந்தது. நான் சுதாரிக்கையில், “அப்போதாம்மா கூடுதலான பயணிகளைக் கையாளமுடியும். இலாபமும் கிடைக்கும்” என்று உண்மை பேசினான்.

பிறிதொருமுறை அவன், படிகளில் நாம் சேர்ந்து ஏறும்போது அனிச்சையாகத் தொடுவதைப்போல் முதன்முதலாக என் கைகளைத் தொட்டான். பின்னொருக்கால் இயல்பாகத் தொடுவதைப்போலத் தொட்டான். அதை விலக்காமலும் தடுக்காமலும்



இருக்குமளவுக்கு கண்ணியமான அந்த ஆணின் தொடுகையையும் வெம்மையையும் அது தந்த சிலிர்ப்பையும் நான் விரும்பினேன், ஒரு தொடுகைகள் தழுவல்களாகி அவை பிணித்து வரக்கூடிய கக்கிசங்களை நான் அறியாமலிருக்கவில்லை. நான் கன்னியாக இருந்தேனா, அந்தத் தொடுகையும் உறவும் சிகரெட்டின் முதல் சுகந்தத்தைப் போல சுகமாகவும் வேண்டுவதாயும் இருந்தன. சுகம் சுகம் சுகம் சுகத்தின் திசையில் நாம் இருந்தோம். அவனது தொடுகைகள் என்னை வேறொரு உலகத்துள் இட்டுச் சென்றன.

அவனோ நானோ காதல் சொட்டும் பிரவசனங்கள் எதையும் உதிர்க்கவில்லை. தமிழ் படங்களினிடையே வந்த ஆங்கில / ஃப்ரெஞ்சுப் பட டிரெயிலர்களில் கண்ட முத்தங்கள் மொஸ்கோவில் நனவாயின. எம் மனங்களும் உடலமும் அதிர்ந்தன. அவனது அணுக்கமும் படர்தலும் எனக்கொரு காபந்தைத் தருவதைப் போலொரு பிரமை.

சில பயணி மடந்தையர், கெதியாய் இங்கிருந்து கிளம்பிவிடுவதற்காக வலிந்துபோய் முகவர்களிடம் கொஞ்சுவதும் சல்லாபிப்பதும் மேற்செல்வதும் நான் கண்டதுதான். கம்பனுக்கும் எனக்குமிடையே நிபந்தனைகள் எதையும் நாம் வைத்துக்கொள்ளவில்லை.

நான் இயல்பில் விலை உயர்ந்த வாசனைத் திரவியங்கள் எதையும் பாவிப்பவளில்லை. “உன்னிலிருந்து வரும் வாசம் என்னைக் கிறங்கடிக்குது. எத்தனையோ பேர் இந்த வாசற்படியைக் கடந்து போயிருக்கிறாளவை. ஆனால், எவளும் இப்படி உன்னை மாதிரிப் படுத்தியதில்லடி.”

“இது வேறொருவருக்கோ படைக்கப்பட்ட மலராச்சே” என்றேன் சினிமாத்தனமாக.

“அப்போ சும்மா பார்த்து ஜொள்ளுவிட்டிட்டுக் கடந்து போகவேண்டிய பொம்மைக் கடையா இது.”

“எனக்கென்றால் பத்து பதினைஞ்சு வரியம் குளிர்நாட்டில விறைச்சுக் கிடந்து உழைச்சுப் போட்டு, 40 வயதிலை ஒரு 25,30 இலட்சத்தை இடுக்கிக்கொண்டு, மூலவருத்தத்தோடும் வெள்ளெழுத்தோடும் நாட்டில வந்திறங்கிறதில விருப்பமில்லை. இரண்டு வருஷத்தில எது முடியுமோ அதை உழைச்சுக்கொண்டு, நம்மட நாட்டில சந்தோஷமாய்ப்போய் வாழவேண்டும். அதுக்காண்டித் தூள் விக்கவெல்லாம் போகமாட்டன்.”

“அதென்ன தூள் விக்கிறது?”

“அட தூள் தெரியாதா தூள் உனக்கு? விட்டா உலகத்தையே கவிழ்க்கிற மாதிரிக் கதைக்கிறீர் தூள் தெரியாதா தூள்.”

கலாச்சாரக் காவலர்களோடு கம்பு சுற்றாமல் இந்த கம்பன் என்கிற துருத்தி நிற்கும் இப்பாத்திரத்தை என் கதைக்குள்ள புகுத்த முடியாது. ஆனாலும், என் கதையின் மையமும் திருப்புமுனையும் அவன்தான்.

“இப்பதான் 2 பெக்ஸ் வொட்கா அடித்தேன்” என்பான். அவன் செயற்பாடுகள் அனைத்திலும் ஒரு வெளிப்படைத்தன்மை இருந்தன. நிறைய என்மேல் ஆசைப்பட்டான். பலரும் கீட்கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கவும் அவனது பெரிய நேசத்துக்கும் வாஞ்சைக்கும் செம்மனதுக்கும் தெரிந்தே அவனுடன் நிரம்பச் சுற்றினேன். இருபதுக்குட்பட்ட என் இளமைக்காலம் ஒரு குகைக்குள்ளேயே கழிந்துவிட்ட பிரமை. கட்டுப்பாடுகள் நிறைந்த யாழ் சமூகத்திலிருந்து வருபவள், Wroclawவின் இந்த விடுதலையில், சுதந்திரச் சுவாசத்தில், பூலோகம் என்றொரு பொருளுள்ளதை இவ்வர்ஷி மறந்தாளடி. அவன் அனந்தவர்ஷிணி என்கிற என்பெயரைச் சுருக்கி ‘வர்ஷி’ ‘வர்ஷி’ என்று கிசுகிசுப்பாக அழைக்கும்போதெல்லாம் என் பெயருக்கு இன்னும் ஆயிரம் அர்த்தங்கள் இருப்பதைப்போல் என் பெயர் என்னையே கிளர்த்திற்று.

“உன்னை பெயரை வர்ஷின்னு சொல்கிற ஒவ்வொரு தடவையும் எனக்குள்ள ஒரு பூந்தூவல் பனுக்குதம்மா.”

“அப்புறம்?”

“நாங்கூட உன்னையை பார்த்தவுடனே மனசுக்குள்ள உனக்கு வேறயொரு பெயர் வைச்சுட்டேன் தெரியுமோ. ஆனா அதைச் சொன்னாக் கோவிச்சுப்பியோன்னுதான் பயந்திட்டிருந்தேன்.”

“ம்ம்ம்.. இன்ரெறெஸ்டிங். அதென்னா பெயர் சொல்லுங்க.”

“கோவிச்சுக்கமாட்டேன்னு சொல்லு.”

“இல்லை கோவிச்சுக்கலை, சொல்லுங்க ப்ளீஸ்.”

“எதுக்கும் தள்ளி நின்றே சொல்லிடறேன்மா, ம்ம்ம்ம், ‘தொதல்’.”

“அதென்ன மாமே.... புச்சா கீது, ஏதாச்சும் காரணப் பெயரோ.”

“ம்ம்ம்.. கொஞ்சம் காரணப் பெயர்தான்.”

“அது இன்னா காரணம், நான் ப்றவுணா இருக்கிறதா?”

“இல்லை. எல்லாப் பக்கத்தாலும் கடிக்கலாம்போல, அதுக்குச் சொன்னேன்.”

“ஏன் தொதல் மட்டுந்தான் அப்படியா?”

“இல்லை லட்டு, ஜாங்கிரி, அல்போன்ஸா மல்கோவாகூட அப்படித்தான்.... ஆனால் எல்லாத்திலும் ஆசைப்பட்டு என்னாவப் போவுது” என்றவனின் பார்வை என் மார்பில் நிலைத்தது.

“லட்டு, ஜாங்கிரி, மல்கோவா, தேனடையை / மாயம் என்றொதுக்கும் பக்குவம் வாய்த்திராப் பேதையன் ஏதிலி என்செய்கும்.”

“ஏதேது சாரு குதம்பைச் சித்தர் றேஞ்சுக்குப் போயிட்டாப்போல.”

“அல்ல.. அல்ல.. அப்படியாக முடியலை என்றிவன் ஆதங்கத்தைச் சொன்னேன்.”

இப்படியெல்லாம் ‘தொதல்’ மதிரி இருக்கேன்னு சொல்லிட்டதால, அவனை, அப்போ நீ என்னைக் கட்டிக்கிறியான்னே நான் கேட்கலை. அவன் எனக்கோ நான் அவனுக்கோ ஆசை காட்டினோமில்லை. என் கையிலடித்து சினிமாப் பாணியில், “உன்னைக் கைவிடமாட்டேன் என் கண்மணி” என்று சத்தியங்களும் செய்யவில்லை. எமக்குள் நெருக்கம் அதிகமான பிறகுங்கூட நாம எப்போ, எந்த நாட்டில் போய் நிலையாகக் குடியமர்வதென்றெல்லாம் கூட்டுக்கனவுகள் கண்டோமில்லை.

எங்களை ஜெர்மனிக்கு ஏற்றிவிட்டு மறுநாள் காட்மண்டூடாக லாவோஸ் போகவிருந்த கம்பனும் நானும் ஒரே கட்டிலில் படுத்தோம். செம்பு நிறத்தில் ஒரு நிலவு ஜன்னலூடாக மினுக்கிச் சேர்ந்திசைத்தது. குளிரும் உணர்ச்சிகளின் கொந்தளிப்பும் தீண்டலின் கதகதப்பும் லாகிரிக் களிப்பின் மாயக் கணங்களில்.

“இப்படி உன்மேல் ஆவியும் வருமென்று எனக்கு முன்னமே சொல்லலையே.”

“உனக்கு மேலதான் அது வந்ததென்று நான் நினைத்தேன், போடி” என்று என்னை அணைத்து நெருக்கவும், கால்களிடையே மர்மமாயமைந்த சிறு மைதுனம் இத்தனை கக்கிசங்களுக்கும் மூலமாகுமென்று யார் எதிர்பார்த்தா?

ஆட்டுக் குட்டிக்கு இலையைத் தின்னக்கொடுக்கும் போது அதன் நாவு விரல்களின் நுனியில் பட்டுப்பட்டுச் செல்லமாய்க் கூச்சங்காட்டுமே, அப்படி அடிக்கடி அவன் நினைவுகள் மனதில் சிலகாலம் வந்து வந்து, செல்லமாய்க் கவ்வியும் நன்னியும் கூச்சங்காட்டிக் கொண்டிருந்தன. இனிய கனவுகளாலமைந்த அந்த அத்தியாயம் கடுகிக் காணாமற்போனது.

அர்த்த சாமங்கடந்த பின்னிரவில், உபமுகவன் ஒருத்தன், என்னை நேராகக் கொண்டுவந்து ஜெர்மனியின் கார்ள் மார்க்ஸ் நகரிலேயே இறக்கிவிட்டான்.

கம்பன் தன் பயண முகவர் ஊழிய நிமித்தம் லோவோஸுக்குப் போவதாகப் போனான், திரும்ப வில்லை. இரண்டு ஆண்டுகள் கழித்து நிலங்கீட் சிறை யிலிருந்து விடுதலையாகி வந்த ஒருவன் அவனை அங்கே பார்த்ததாகச் சொன்னதைத் தவிர அவனைப் பற்றிய வேறு தகவல்கள் இதுவரை வரவில்லை. மாதவிலக்கு இரண்டு மாதங்கள் தள்ளிப்போவதெல்லாம் எனக்கு வழமையாக ஏற்படுவதுதான். அம்முறை நிஜமாகவே தள்ளிப்போயிற்று. அதன்பிறகு எல்லாமும் மாறிப்போகுமென்பது என் அறிவில் உறைத்தது.

என்னை ஜெர்மனிக்கு வரவழைத்தவர் எனக்குச் சொந்தக்காரர்தான். சுற்றிக்கொண்டு பார்த்தால் என் சித்தப்பா மணம் செய்தவகையில் வரும் சிற்றன்னையின் சகோதரர்களில் ஒருவர். ஆக எனக்கு மாமா முறையாக வேண்டும். என்னைவிடவும் 13 அகவைகள் மூத்தவரான அம்மாமா, என்னைத் தானே மணம் செய்யும் நினைப்பில்தான் அழைப்பித்தாரோ, இல்லை ஆண்கள் இல்லாத எம் குடும்பத்துக்கு உதவும் எண்ணத்தில்தான் அழைப்பித்தாரோ, உறுதியாகத் தெரியவில்லை. அவரிடம் நான் கர்ப்பமாகஇருப்பதைச் சொன்னதும் என்னிடம் புலன் விசாரணைகள் எதுவும் செய்யவில்லை. ஆனால், விரைந்து எனக்கு மாப்பிள்ளைகள் பார்க்க ஆரம்பித்தார். அவ்வேலைகள் கனகதியில் முடுக்கிவிடப்பட்டன.

என் வாழ்வுக்கு எதிரே நான்கு தேர்வுகள் இருந்தன. எவரையாவது திருமணம் செய்துகொண்டு வாழ்வைத் தொடர்வது, கருச்சிதைவு பண்ணிக்கொண்டு மீள்வும் கன்னியாகிவிடுவது, நான் கர்ப்பமாக இருப்பதே தெரியாத கம்பன் மீண்டுவந்து என்னை அடையும் வரையில் காத்திருப்பது, இல்லை.. இனித் தனித்த அம்மாவாக என் குழந்தையுடன் வாழ்ந்துவிடுவது?

என் குழந்தை எனக்கு வேணும். எது எப்படியானாலும் கருச்சிதைவு செய்வதில்லை என்பதில் உறுதியாக இருந்தேன்.

அப்போது ஜெர்மனி பூராவும் பரவலாக முப்பதைக் கடந்த இளைஞர்கள் நிறைய பேர் திருமண வாய்ப்பின்றி இருந்தனர். ஆதலால், எனக்கான சுயம்வரத்தின் இறுதிச் சுற்றுவரையில் ஐந்து ராஜகுமாரர்கள் பங்கெடுத்தனர். அவர்களில் ஐவரைத் தெரிவுசெய்து அவர்களுடன் பேசினேன்.

அவர்களில் மூவருக்கு ஜெர்மன் பிரஜாவுரிமையும் அது ஒரு தனித்தகுதி என்ற எண்ணமும் பெருமையும் நிறைய இருந்தன. மற்றவருக்கு தான் வகிக்கும் பதவி பற்றிய பெருமை இருந்தது, ஜெர்மனியின் பிரசித்தமான BMW மகிழுந்துகள் தயாரிப்புக் குழுமத்தில் தான் ஒரு பகுதிக்கு ஃபோர்மனாகவும் கண்கணிப்பாளராகவும் பணியாம். வெளிநாட்டவருக்கு அதுபோன்ற பணிகள் இலகுவில் கிடைத்துவிடாதாம். தனக்குங்கீழ் 30 பேர் பணிபுரிவதாக இரண்டாவது தடவையாகவும் பேச்சிடையே குறிப்பிட்டான். பிரஜாவுரிமை இருப்பதை ஒரு தனியான தகுதியாக கருதிக் கொண்டிருந்தவர்களையும் தன்கீழ் ஜெர்மன்காரர்கள் பணிபுரிகிறார்கள் என்பதில் புளகாங்கிதம் அடைந்திருந்தவரையும் முதற்கட்டத்திலேயே நிராகரித்தேன்.

ஐந்தாமவன்தான் விஷாகன். அவன் இங்குவந்து 7 ஆண்டுகள்தான் ஆகியிருந்தன. Duldung எனப்படும் (நிரந்த வதிவிட அனுமதி தருவதா இல்லையா என்று தீர்மானிக்கப்படாத) வகையிலான வதிவுட அனுமதியைத்தான் வைத்திருந்தான். அவன் அதைப் பற்றி அலட்டிக்கொள்ளவில்லை. அவனது முன்கதை வேறுமாதிரியாகவும் நம்பும்படியாகவும் இருந்தது. ஆரம்பத்தில் ஒரு போராட்ட இயக்கத்தில் போராளியாக இணைந்தவன் இந்தியாவுக்கு பயிற்சிக்காகப் போனவிடத்தில் அங்கே தன்



பயிற்சி அணித் தலைவனுடன் உண்டான கருத்து மோதாலால் இயக்கத்தைவிட்டு வெளியேறி, மும்பைக்குப் போய், அங்கிருந்து தயாரிக்கப்பட்ட இந்தியக் கடவுச்சீட்டுடன் வணிகக் கப்பலொன்றில் 10 மாதங்கள் பணியாற்றிவிட்டு, Bremen துறையில் கப்பல் தரித்தபோது அதிலிருந்து நிரந்தரமாக இறங்கிக்கொண்டவன். எமக்கிடையே ஒரு புரிதலும் நெருக்கமும் வந்தபின்னால் என் முன்கதையைச் சொன்னபோது அவன் நம்பவில்லை. நான் சும்மா நூல்விட்டு ஆழம் பார்ப்பதாக நினைத்தான். இல்லை எல்லாம் நிஜம் என்றபோதும் அதிர்ச்சியடையவில்லை. இயல்பாக எடுத்துக்கொண்டான்.

மனத்தளவில் ஒரு ஸ்டெப்னியை (மாற்றீடு) போலத்தான் எவனுடனாவது வாழ அமையுமோவென எண்ணியிருந்தவளின் வாழ்வின் புதிய அத்தியாயமாக விஷாகன் வந்தான். அவன் விரித்த வானத்தின் கீழே வாழ்வின் புதிய வெளிச்சங்களும், உற்பாதங்களுக்கு விடுதலையும், வலிகளுக்கு சுகமும் அளிக்கவல்ல செம்மனசின் மாயக்கரங்கள் அவனிடம் இருந்தன.

நவாலி செயின்ட் பீற்றேர்ஸ் தேவாலய விமானத் தாக்குதலின்போது களத்தில் தன்னார்வ உதவியாளனாக இருந்தானாம். சிதறிய மனுஷருடைய தேகங்களை தேடித்தேடி ஒன்றாகச் சேர்த்து வைத்தவனுக்கு இது லேசான சாங்கியமாக இருந்தது.

மிகமிக எளிமையான திருமணம். நாம் பந்தத்தில் இணைந்த ஏழாம் மாதம் மூணாவது வாரத்தில் ஹன்னா பிறந்தபோது எவரும் புருவத்தை உயர்த்தாமலிருக்க, அதொரு முன்கூட்டிய பிரசவம் என்றும், சிசு அடைத்தொட்டிலில் (Incubator) வைக்கப்பட்டுள்ளதாகவும், பார்வையாளர்களை மருத்துவமனை தடை செய்துள்ளதாகவும் சொல்லி, வருகையாளர்களைத் தவிர்த்தோம்.

பசளைமேட்டின் கீரைச்செடியென கிசுகிசென்று ஹன்னா வளர்ந்தாள், தவழ்ந்தாள், புரண்டாள், குதித்தாள், படித்தாள், மிளிர்ந்தாள். யாரிடமும் விரைவில் கலந்துகொண்டுவிடும் சுபாவம் இயல்பாய் அவளுக்கு. அயலவர் வீட்டு நாய்களும் பூனைகளும் அவளையே சுற்றி நிற்கும். இன்னும் மரங்கள், செடிகள், பூக்கள், புற்றரைகளில் ஹன்னாவின் தீராத காதல். அவளது 13ஆவது கல்வியாண்டுத் தேர்வுகள் முடியவும் அவளுக்கு மருத்துவம் சார்ந்த துறைகளில் ஈடுபாடு இருப்பது தெரிந்தது.

விஷாகன் அவளது உயிரியல் தந்தையல்ல என்பதை அவளிடம் இன்னமும் மறைத்து வைத்திருக்க வேணுமா என்பதில் எம்மிடையே தீராத விசாரம் இருந்தது. சில உளவியல் மருத்துவர்களிடம் நிபுணத்துவ ஆலோசனைகள் பெற்றிருந்ததில், அவளாக ஒருநாள் நிஜத்தை அறிய முன்பதாக உண்மையை அவளுக்குத் தெரிவித்துவிட விரும்பினோம். கோடைகால விடுமுறையைக் கழிப்பதற்காக ஹன்னாவுடன் மலாக்கா (ஸ்பெயின்) தீவுகளுக்குச் சென்றிருந்தபோது

அங்கே அவளுக்குப் பிடித்த மீன் வெதுப்பும் Chianti Classico வைனுடனுமான ஒரு மாலைப்பொழுதில், முழுக்கதையையும் அவளுக்குச் சொன்னோம். கதை யாருடையதோ என்பதைப்போல சுவாரசியமாகக் கேட்டவள், அது நிறைவுற்றதும் நாலைந்து மணித்துளிகள் மூச்சைவிட மறந்தவள்போல் இருந்தவள், பின் மன்னையை இறக்கிவைத்து, உதடுகளைப் பிதுக்கிக்கொண்டு அழுதாள்.

"எதுக்குச் செல்லம் அழுவுறே?"

"எனக்கும் என்ன செய்றத்னு தெரியல, அதுதான் கொஞ்சம் அழுது பார்த்தேன். சுகமாக இருக்குது" என்றவள் கண்கள் நிறைந்திருக்கச் சிரித்தாள்.

"அவன் உன்னையை ஒன்றும் ஏமாற்றவில்லையே? எங்கூடப் படுத்தாத்தான் உன்னையை ஜெர்மனிக்கு அனுப்புவேன் அப்படியென்று கொலை மிரட்டல் (பிளாக்மெயில்) பண்ணலயே."

"இல்லம்மா, அவன் தொழிலில் என்னையை அனுப்பினாத்தான் அவனுக்கு அடுத்த பயணி கிடைக்குங்கிறநிலமையில்இருந்தான். பின் பயணிகளை அழைத்துவாற விஷயமாய் லாவோஸ் போனபோது அவனது தொழில் எதிரிகள் வைத்தபொறியோ என்னமோ சரியாய்த்தெரியலை, அங்கேபயணிகளுடன் சேர்த்து பிடிபட்டதில் இரண்டு ஆண்டுகள் சிறை யிலிருக்க நேர்ந்திருக்கு. அவன்கூடச் சிறையிருந்த வேறொரு முகவன் வெளியில் வந்து அங்கே கம்பனைப் பார்த்ததாகச் சொல்லித்தான் எமக்கும் விடயம் தெரிய வந்துச்சு."

பின் அன்றிரவே ஹன்னா எல்லாவற்றையும் புரிந்து ஏற்றுக்கொண்டு, தன் இயல்பு நிலமைக்குத் திரும்பிவிட்டிருந்தது, எமக்கும் மகிழ்ச்சியாயிருந்தது. எனக்கும் ஒரு மனச்சுமையை இறங்கிவிட்டதைப் போலிருந்தது.

என்றாவது ஒருநாள் 'நான் கம்பனைப் பார்க்கணும்னு சொல்வாள்' என நினைத்தேன், அப்படி எதுவும் நடக்கவில்லை. அப்படி தான் கோருவது எங்களை ஒரு அந்தரத்துக்குள் இடுவதாயிருக்குமென அவள் நினைத்தும் மௌனமாக இருந்திருக்கலாம்.

ஹன்னாவுக்கு இப்போது மருத்துவக் கல்வி பயில இடங்கிடைத்து அவள் துறையில் பயிலும் ஒருவனுடன் சிநேகிதமாகியிருந்தது. அவனுடன் பேச விடயமில்லாதபோது தன்பிறப்பின் மூலத்தைச் சலம்பி யிருப்பாள்போல. பிரச்சினையின் ஆரம்பப்புள்ளி அதுதான். வசீகரன் அதை அறியாமலிருந்தால் கம்பனுக்கு இந்நிலமை ஏற்பட்டிருக்காது.

குத்துப்பட்டவனுக்காக ஒருதுளி கண்ணீர் உகுப்பதை எவரும் மறுத்தோ தடைபோட்டோ வைத்திருக்கவில்லை. சிசு வயிற்றில் துடித்த கணத் திலிருந்து, ஹன்னா பிறந்தது வரையில் என் மனதில் உதித்து நின்றிருந்த பெயர் சகுந்தலாதான். ஆனால், ஒருவேளை எமக்கு இன்னொரு குழந்தை பிறந்தால் அப்பாவின் அரவணைப்பில் வாழக் கிடைக்காத ஹன்னாவுக்கோ விஷாகனுக்கோ அப்பெயர் உறுத்துமோவெனப் பயந்து அதை மறந்துவிட்டிருந்தேன்.

பேய் எனக்கு அவனிலும் இஷ்டம்டா என்று பாஞ்சாலியைபோல உக்கார்ந்துகூவவில்லை. இவனுக்கென்ன வந்தது, ஹன்னாவைச் சூரியனின் குழந்தை என்றேனா? புலம்பெயர் சமூகத்திலும் தமிழ் சினிமாக்களால் வளர்த்தெடுக்கப்பட்ட கற்பிதங்களாலும், என்னை யாரோ ஏமாற்றிவிட்டதாக தானாகவே ஒரு முடிவுக்கு வந்து, தானாகவே அவனுக்குத் தண்டனையுந்தர முடிவெடுத்து. ஒரு வாழ்வுழியின் மீது கத்தியைச் சொருகுவது பைத்திய மனோபாவமன்றி வேறென்ன? அவனைத் தூக்கிப்போட்டு மிதிக்கவேண்டும் போலிருந்தது. இப்பிரகிருதிக்காக நான் கம்பனிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும். எதுக்கடா இப்போ பெர்லினுக்கு வந்தே, அநியாயமாய் இப்படிக் குத்துப்படவா?

நானே Wroclawவுக்குப் பிறகு இதுவரையில் பார்த்திராத கம்பன், இந்தப் பிறந்தநாள் விழாவுக்கு வருகிறான் என்பதை Investigative Committee of Russiaதான் புலனறிந்து இவர்களுக்குச் சொல்லிச்சோ என்னவோ?

ஊரில சுபாங்கியின் புருஷன் மேகநாதன் துபாயில் பெற்றோலியச் சுத்திகரிப்பு ஆலையொன்றில் இரசாயனியாகப் பணியேற்று ஐந்து ஆண்டுகள் ஒப்பந்தத்தில் சென்றிருந்தான். அந்நிறுவனத்துக்கு ஒரு இரசாயனி விடுப்பில் சென்றால் அப்பணி யிடத்தில் பிறிதொரு இரசாயனியை நியமனம் பண்ண வேண்டியிருக்குமாம். அதனால் இவனை மேலிடம் விடுப்பு எதுவும் எடுக்காமல் பணிபுரிய வலியுறுத்தி அதுக்கு இரட்டிப்புச் சம்பளத்தைக் கொடுக்கவும் மேகநாதனுக்கும் கொஞ்சம் பணவாஞ்சை. அதனால, ஐந்து ஆண்டுகள் ஊருக்கு வராமலே துபாயில் தொடர்ந்து ஊழியம் செய்தான். வாரம் ஒரு தடவை சுபாங்கினிக்கு போன் செய்து பேசுவதோடு சரி. பரதேசிக்கு குழந்தை மேல பிரியமும் மனைவி மேல மோகமுமிருந்தால் இப்படியா ஆண்டுக்கணக்கில் துபாயில் கிடப்பான்?

திருநெல்வேலி ஆடியபாதம் வீதியில் மின்சார உபகரணங்கள் விற்பனை நிலையமொன்றில் பணிசெய்யும் சுபாங்கியின் உறவுக்காரப் பையன் ஒருவன், ஷியாமென்று ஏசியா மிதியுந்தொன்றில் வந்து, அவளுக்கு மீன் காய்கறிகள் வாங்கித் தருவது, ரேஷன் அட்டைக்கு உணவுப் பங்கீட்டுப் பொருட்களை வாங்கித் தருவது, ஆகியவற்றில் உதவிகள் செய்துகொண்டிருந்தான். மேகநாதன் அனுப்பிவைக்கும் பணங்கள் வந்துகுவியத் தொடங்கவும் சுபாங்கி, ஷியாமுக்கு ஒரு றோயல் என்ஃபீல்ட் விசையுந்தும் வாங்கிக் கொடுத்தாள். அது அவர்களுக்கு வங்கிகளுக்குப் போகவும் குழந்தைக்கோ அவளுக்கோ உடனலமில்லாதபோது டாக்டரிடம் போகவும், யாழ் முற்றவெளி, பூங்காவோடு இடைசுகம் அவள் விரும்பும்போது நல்லூர் / செல்வச் சந்நிதி கோவில்களுக்குப்போகவர மிகவும் வசதியாகவிருந்தது. சில நாட்களில் சற்றுத் தொலைவிலுமாக வல்லிபுர ஆழ்வார்கோவில், நாகர்கோவில், கசுரைனா கடற்கரை, குடாநாட்டில் மேகநாதன் அவளுக்கு ஒருபோதும் காட்டியிராத பல இடங்களையெல்லாம் அவளுக்குச்



சுற்றிக் கண்பித்து அவளுக்கு எல்லாவகையிலும் ஒத்தாசையாக இருந்தான்.

ஷியாம் - சுபாங்கி பெயர்களைப் போலவே அவர்களுக்குள்ளும் ஒரு இணக்கமும் புரிந்துணர்வும் இருந்தன. அதனால், எவருக்கு வந்த கேடென்ன? ஆரம்பத்தில் அவர்கள் ஜோடியாக விசையுந்தில் கடப்பதைப் பார்த்ததும் தம்தோளையுயர்த்தித் தாடைகளில் இடித்துக்கொண்ட ஊர்ப் பெண்களுக்கு அப்படி இடிப்பதே நாளடைவில் அலுத்துப்போய் அதுவே இயல்பானது. சுபாங்கி, ஷியாம்கூட சுற்றுவதால்த்தான் அவள் புருஷன் ஊருக்கு வராமலிருக்கிறான் என்றுமொரு பேச்சும் மறைவில் தூறச்செய்தது.

சுபாங்கியின் வீட்டுக்கும் எங்கள் வீட்டுக்கும் நடுவில் காவ்யா வீடிருக்கிறது. அவள் யாழில் ஒரு புகழ்பெற்ற கல்லூரியில் 9ஆவதில் வாசிக்கும் சின்னப்பொண்ணு. சுற்றிப் பார்த்தால் எனக்கும் உறவுதான். ஊர் விடுப்பு விண்ணாணங்களில் விருப்பு அதிகம். ஒருநாள் தன் சட்டையொன்றைச் சின்னதாகப் பிடித்துத் தைப்பதற்காக எங்கள் வீட்டுக்கு வந்தபோது விசையுந்தில் வந்த ஷியாமில் எதிர்ப்பட்டிருக்கிறாள். “வர்ஷியக்கா.... வர்ஷியக்கா” என்றபடி ஓடி வந்தவள், வந்ததும் வராததுமாக பெரிய அம்மாமி மாதிரி ஒரு நொடிப்புடன் முக்கிய செய்தியைப்போலச் சொன்னாள்: “ம்ம்ம். கண்டிட்டுத்தான் வாறங்கா.. தையற்காரர் சுபாங்கியக்கா வீட்டை உருவிக்கொண்டு போறார்.”

“யாரடி தையற்காரர்? எங்கடி போறார்?”

“உங்களுக்குத் தெரியாதா சுபாங்கி அக்காவின் தையற்காரரை?”

“என்னடி சொல்றாய், உன்னளவுக்கு எனக்கு பொதுஅறிவு இல்லைத் தாயே.”

“யக்கோவ்....அந்தஷியாம்தான், அங்கேதைக்கிறது” என்றவள், விரல்களிடையே விரலைக் கோர்த்து அபிநயத்து எனக்குத் தையற் சமிக்ஞை காட்டினாள். அந்த டவுண் ஸ்கூல் அரிவையர் கொஞ்சம் காரம் என்று தெரியும். ஆனால். என்னிடமே இப்படிப் பச்சையாகக் கக்குவாள் என்று எதிர்பார்க்கவில்லை.

ஆனால் நடந்தது வேறு. ஐந்தரை ஆண்டுகள் கழித்து மேகநாதன் கிறைண்டரிலிருந்து கணினிகள், குளிரூட்டிகளென்று ஏராளம் வீட்டு உபகரணங்களுடன் வந்திறங்கினான். காத்திருந்த நூற்றுவர் எண் திசைகளிலிருந்தும் தத்தம் கொள்ளிகளுடன் அவனிடம் ஓடிவந்தனர். அனைவருக்கும் குளிர்ச்சியாக எலுமிச்சைச் சாதமும் மோர்ச் சாதமும் அல்வாவும் கொடுத்துத் திருப்பி அனுப்பி வைத்துவிட்டு சுபாங்கியுடன் தொடர்ந்து சந்தோஷமாக வாழ்ந்தான்.

**வ.**ஐ.ச. ஜெயபாலன் தன் கவிதையில் சொன்னமாதிரி, விதிக்குரங்கு கிழித்துப்போட்ட தலையணையின் பஞ்சுகளாய் காற்றோடு வாழ்வில் அடிபட்டு அலைந்து கரையொதுங்கி அமைதியாக வாழத் தொடங்கியிருக்கும் வேளையிலும், எதிர்பாராத புதுச்சுனாமிகள் திடீரென கிளம்பிச் சுழற்றியடித்தால் செய்வது என்ன?



அமைதியாகவும் நிதானமாகவும் என் பிரச்சினைகளை எடுத்து வைத்துச் சிந்திக்க ஆரம்பித்தேன்.

வசீகரனைக் கைது செய்த காவல்த்துறைக்கு அவனொரு விலைக் கொலையாளியாக (Paid-killer) இருப்பானோவென்ற சந்தேகம் இருந்தது. அவனது உடாட்டங்கள், கல்வி, நண்பர்கள் இவர்கள் வட்டத்தில் ஆய்ந்தபோது அவனுக்கு போதை வஸ்த்து கடத்தல்காரர்களுடனோ, வேறு வகையான மாஃபியாக் கும்பல்களுடனோ எவ்வித தொடர்புமில்லை என்பது உறுதியாயின. பின்னும் அவனைத் தொடர்ந்த உளவியல் ஆய்வுக்கும் பகுப்புக்கும் உட்படுத்தினர். தன் காதலி ஹன்னாவின் உயிரியல் தந்தை கம்பன் என்றும், ஹன்னாவின் தாய் திருமணமாகாதவராக இருந்தபோது அவளது கர்ப்பத்துக்குக் காரணமாகவிருந்தவன் என்பதால் கம்பனைக் கண்டவுடன் எழுந்த மனக்கொதிப்பினால் விளைந்த கட்டுமீறிய செயல் என்றும், வாக்குமூலம் கொடுத்தான்.

ஒரு மாதம் வரையில் குடும்பப் பிரச்சனைகளுக்கு மட்டுமான தீர்ப்பாயத்தில் தீவிர விசாரணைகள் பல்வேறு கோணங்களில் நடந்தன. வல்லுறவின் விளைவால் ஒரு பெண் கர்ப்பமானாலேயன்றி பரஸ்பர உறவில் கர்ப்பம் ஏற்பட்டால் அதற்காக ஆண்களைத் தண்டிக்க எந்தநாட்டின் சட்டத்திலும் இடமில்லை.

காவல்நிலையத்துக்குப் போய் அத்தேதியில் கத்திக் குத்துக்காளானவர் அனுமதிக்கப்பட்டிருக்கும் மருத்துவமனை விபரங்கள் உசாவினோம். "இதுதான் முகவரி; ஆனால், அவர்கள் உங்களைப் பார்வையிட அனுமதிப்பார்கள் என்பதற்குத் தாங்கள் உத்தரவாதம் தரமுடியாது" என்றனர்.

சீருந்தொன்றில் அங்கே விரைந்தோம். வரவேற்பில், 'எங்களை யார்' என உசாவினார்கள். விஷாகன் 'நாம் உறவினர்கள்' என்றான். அவர்கள், 'எந்த வகையில்' எனவும் நான் உடனே 'Der Patient ist mein Ex-Freund' என்றேன், புரிந்துகொண்டு மேலிடத்திலும் தொலைபேசி உறுதிபெற்றானபின் எம்மைப் பார்வையிட அனுமதித்தார்கள்.

வார்ட்டில் அங்கே கம்பன் சுற்றமும் நட்பும் புடைசூழப் படுத்திருப்பான் என எதிர்பார்த்திருந்தேன். தட்டந்தனியே நாலைந்து விநியோகக் குழாய்கள் பொருத்தியபடி தானுண்டு தன் கட்டிலுண்டென்று படுத்திருந்தான். ஹன்னாவை முதலில் அறைக்குள் அனுப்பிவிட்டு நாங்கள் வெளியிலிருந்தோம். இருவரும் ஒருவரை ஒருவர் அதிசயித்துப் பார்த்தபடியிருக்கையில் மேலும் எம்மைக் கட்டுப்படுத்த முடியாமல் அறைக்குள் நுழைந்தோம். என்னைப் பார்த்ததும் ஒரு வேற்றுலகக்காரிகையைப் பார்ப்பதுப்போலப் பார்த்தவன் முகம் விகசித்தது, அழகாயிருந்தது. நெற்றி சற்றே மேலேறியும் வெளித்துமிருந்தது. தாடையில் அங்கங்கே மினுங்கிய வெள்ளை முடியுடன் இளைஞன் கோலம் மாறி 40 அகவைகள்கொண்ட மனிதனாகி விட்டிருந்தான்.

அந்நேரம் பார்த்து விடுதி வலம் வந்த மருத்துவர்கள், "பாய்ந்த கத்தி நல்வாய்ப்பாக அவனது உள்ளுறுப்புகள் எதையும் சிதைக்கவில்லை; அதனால் உயிராபத்து எதுவுமில்லை" என்று முறுவலித்தனர்.

"உன் மருமகனின் கைங்கரியம் என்கிறார்களே" என்றான் கம்பன்.

நான், "இல்லை, உன் மருமகனின் கைங்கரியம் என்று சொல்லு" எனத்திருத்தவும் கம்பன் கட்டிலைவிட்டுயரப் பறப்பதாக உணர்ந்தான். விஷாகன் விருட்டென, "பேசிக் கொண்டிருங்கள், ஐஸ்கிறீம் வாங்கியாறேன்" என்றுவிட்டு மாறினான்.

மகளை வாஞ்சையோடு அணைத்து முத்தமிட்டான். நாம் வகை தெரியாத உணர்ச்சிகளால் பின்னிச் சிக்குண்டோம். பத்திரிகைகள், பார்வையாளர்கள் இன்றி குடும்ப வழக்குகளை மட்டும் விசாரிக்கும் தீர்ப்பாயம், "வசீகரனுக்கேற்பட்ட தவறுதலான புரிதலினால் எழுந்த உணர்ச்சிக் கொந்தளிப்பில், சுயகட்டுப்பாடு குன்றித்தாக்க முயற்சித்ததின் விளைவு" என்பதை ஒப்புக்கொண்டு, கம்பனின் ஒப்புதலில் அவனை விடுதலை செய்தது.

சுபாங்கிக்கு யாழில் அழகான வீடும் 50 பரப்புக்கும் மேற்பட்டதுமான ஆதனங்கள். போதாததுக்கு மேகநாதன் சவூதியில் திரட்டி வந்த டொலர்கள் எல்லாமிருந்தும், இந்திய அமைதி காக்கும் படை இலங்கையில் கால் பதித்ததும், அவர்களுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையேயான போர் உக்கிரம் பெறவும், உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு அவ்விணையும் ஜெர்மனிக்கே வந்து சேர்ந்துவிட்டது. அவர்கள் இன்னும் இரண்டு குழந்தைகள் பெற்றுக்கொண்டு சந்தோஷமாக வாழவேண்டும்.

காவ்யாவும் ஷியாமை 'தையற்காரன், தையற்காரன்' என்று பழிப்பும் வலிச்சமும் காட்டிவிட்டு, கடைசியாக அவனையே மணந்துகொண்டு ஏதோவொரு நாட்டில் புலம்பெயர்ந்திருக்கிறாளாம். எங்கேயென்றாலும் அகதி முகாங்களில் அடைந்து கிடந்து வாடாமல் அவர்களும் நல்லபடி வாழவேண்டுமென்று மனது விரும்புகின்றது.

வாழ்க்கை ஒவ்வொருவருக்கும் போட்டுத் தரும் பாட்டைகள்தான் எத்தனை புதிரானவை. ●

**பொ. கருணாகரமூர்த்தி <karunah08@gmail.com>**

● சிறுகதை

# பச்சைக்கிளி

புதியமாதவி

ஓவியம்: Edvard Munch

அவனுக்கு அவள் பதில் அதிர்ச்சி அளித்தது.

*"அவன்கிட்ட இல்லாதது அப்படி என்ன உங்கிட்ட பெரிசா இருக்கு? எப்போ பாரு அவனைப் பார்த்து கருப்பன் கறுப்பங்கிற."*

அவள் இப்படி கேட்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. வழக்கமாக ஏற்படும் கோபத்தையும் தாண்டிய அதிர்ச்சியில் அவன் முகம் சுருங்கி ப்ளாக் அவுட் ஆனது.

அவனைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. அவனால் இனி நிம்மதியாக தூங்க முடியாது. லேப்டாப்பில் பொம்பளைகளைப் பார்த்து ரசிக்க முடியாது. பாத்ரூமில் பாட்டுப் பாடிக்கொண்டு குளிக்க முடியாது. ஆபிஸில் லேட்டா உட்கார முடியாது. அவன் கொஞ்சம் ஆடிப் போய்விட்டான். அவன் காரை ஓட்டிக்கொண்டு வரும்போது வழக்கமா சொல்ற எந்த வசனத்தையும் சொல்லாமல் மவுனமாக காரை ஓட்டிக்கொண்டு வந்தான்.



இருவரும் பேசிக்கொள்ளவில்லை.

அவன் அடிக்கடி அவளைப் பார்த்துக்கொண்டே காரை ஓட்டினான். என்னவெல்லாம் அவன் நினைக்கிறான் என்பது அவன் சொல்லாமலேயே காதில் விழுந்தது. அது எப்படி மவுனத்திற்குகூட இத்தனை வார்த்தைகள்? மவுனம் இவ்வளவு சத்தமாகவா ஒலிக்கும்?

காரிலிருந்து வழக்கமாக அவன்தான் டிக்கியைத் திறந்து பொருட்களை எடுத்துக்கொண்டு வீட்டுக்குள் நுழைவான். இன்று அவன் அப்படி எதையும் செய்யாமல் வேகமாக வீட்டுக்குள் நுழைந்து அவசரமாக பாத்ரூம் கதவை அடைத்துக்கொண்டான்.

*'இருக்கட்டும், எனக்கென்ன?'*

அவள் தோளை குலுக்கிக்கொண்டு கையில் ஒரு கப் சூடான தேனீருடன் உட்கார்ந்தாள். அவன் அவளைக் கடந்து சென்றபோதும் அவள் பக்கமே திரும்பாமல்

மாடி ஏறினான்.



கத்தப் போகிறான். "எவண்டீ அவன்? அவன மாதிரி கேட்குதா உனக்கு? உன் மூஞ்சிக்கு அவன மாதிரி கரிக்கட்டைதான் கிடைச்சிருப்பான். என் தலைவிதி, என் தலை எழுத்து, நான் மாட்டிக்கிட்டேன். உனக்கெல்லாம் எவன் டீ விசா கொடுத்தான்? எதாவது உன்ன மாதிரி ஒரு எருமைத் தடியன் ஒருத்தன் இருந்திருப்பான். நம்மவ மாதிரி இருக்காளேனு நினைச்சு கொடுத்திட்டான்! மூஞ்சப் பாரு மூஞ்ச, போடி."

அவன் குரல் அவளுக்கு பல ஒலி ஒளி காட்சிகளுடன் ஓடிக்கொண்டிருந்தது. அவள் டிவி ரிமோட்டை எடுத்து டிவியை நிறுத்தினாள். எப்போதும் இரவில்தான் குளிப்பாள். அப்படி குளிப்பது இருவருக்குமே தேவைப்பட்டது. வசதியாகவும் இருந்தது. காலையிலே எழுந்து ப்ரஷ் செய்துவிட்டு முகத்தை மட்டும் கழுவிக்கொண்டு, நேரமிருந்தால் காபியோ கெர்லாக்ஸொ, எதோ ஒன்றை எடுத்துக்கொண்டு அவரவர் வண்டியில் அவரவர் திசையில் அவரவர் வேலைக்கு ஓடுவதற்கும் அதுவே வசதியாகவும் இருந்தது.

பகற்பொழுதின் புணர்ச்சி விதிகள் அவள் அறியாத சூத்திரங்களாகவே இருந்தன. விலங்குகளுக்கு எப்படி? உண்டு உண்டு. வனங்களுக்கென்ன இரவும் பகலும். மனிதனுக்குத்தான் எல்லாம். இரவுதான் மனித உடலின் களவுக்கும், முகம் மறைத்து உடலை மட்டும் சுமக்கும் உறவுக்கும் வசதியாக இருக்கிறதா? ஏன் இப்படி, ஏன் இப்படி? இரண்டு பூனைகள் ஒன்றை ஒன்று கடித்துக் குதறி பிராண்டி குட்டிகள் போட்டுக்கொண்டன என்று எப்போதா வாசித்த வரிகள் நினைவுக்கு வந்தது. இப்படித்தான் அவளுக்கு எப்போதோ வாசித்தெல்லம் சமயம் பார்த்து காதில் ஒலிக்கும்.

அவள் மீதே அவளுக்கு வெறுப்பும் வந்ததுண்டு. இந்த நினைப்புகள் எதுவும் வாழ்க்கையின் யாதார்த்தங்களை மாற்றிவிட முடியாது என்ற எண்ணமும் வந்து தொலைக்கும். அவன் ஏமாற்றவில்லை. அவளும் ஏமாறவில்லை. இருவரும் அறிந்தே செய்துகொண்ட திருமணத்தில் காதலையும் கவர்ச்சியையும் தேடுவது அபத்தம்தான்.

அவன் தன்னைத் திருமணம் செய்துகொண்டது அவளுக்காக இல்லை என்பதை அவள் திருமணத்திற்கு முன்பே அறிந்திருந்தாள். அவனுக்கு அவளுடைய க்ரீன்கார்ட், அவள் லோன் போட்டு வாங்கியிருக்கும் வீடு, அவளுடைய வேலை இத்தியாதி எல்லாம் காரணமாக இருந்தது என்றால், அவளுக்கும் அவனைத் திருமணம் செய்துகொள்வதற்கு ஒரே ஒரு காரணம் இருக்கத்தான் செய்தது. திருமணமாதல் என்பது மட்டும்தான் அந்தக் காரணம்.

கல்யாணம் செய்துகொள்வதற்காகவே அவனைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாள். வேறு என்ன? அவன் அதையும் அவளிடம் மறைக்கவில்லையே. அவன் முதல் சந்திப்பிலேயே அவளிடம் அதை எல்லாம் வெரிபைவ் செய்து கொண்டவன்தானே.

அவனுடைய அம்மா: "ஏய்யா, இப்படி ஒரு பொண்ணு அமெரிக்காவில இருக்காம். உன்னை மாதிரி அவளும் படிச்சிருக்கா."

"சரிம்மா."

"ஜாதகம்கூட பொருந்தி வந்திருக்குடா."

"சரிம்மா. போட்டோ அனுப்பு."

"போட்டோ எதுக்குடா. பக்கத்திலேதானே இருக்கா. ஒரு எட்டு எட்டிப் பார்த்திடு. நம்ம சாதியில படிச்சப் பொண்ணு இருக்கானு கேட்பியே. இப்போ என்ன சொல்ற."

அம்மா பெருமிதத்துடன் அவனுடன் பேசி இருந்தாள். அவளுடைய க்ரீன்கார்ட் அவனுக்கு அன்று ரொம்பவும் அத்தியாவிசமாக இருந்தது. அதையும்விட அவள் சொந்தமான வீட்டில் குடியிருக்கிறாள் என்பது இன்னும் தேவையாக இருந்தது. அவன் லேப்டாப்பில் போட்டு வைத்திருந்த டார்கெட் இப்படி எளிதாக கைக்கு வருகிறது என்றால் அதை ஏன் விட வேண்டும் என்று அவன் நினைத்தான்.

அதை அவளும் அறிந்துதான் இருந்தாள். அமெரிக்க உடலும் சீன உடலும் மெக்ஸிகோ உடலும் எல்லா உடலும் உடலின் சூடும் அவன் இத்தனை வருட அமெரிக்க வாழ்க்கையில் அறிந்ததுதானே.

சரிதான். அப்படித்தான் நினைத்தான். ரொம்ப நாட்களுக்குப் பின் விசிலடித்துக்கொண்டு வண்டி ஓட்டினான். அவளை காபி ஹவுஸில் சந்தித்தான். அவள் முடி சுருட்டையாக இருந்தது. கண்கள் பெரிய திராட்சைப் பழம் போல. அவள் முழுக்கைச் சட்டைப் போட்டிருந்தாள். அவள் சிரிக்கும் போது அவள் பல் அதிகப்படியான வெள்ளை நிறத்தில் பளிச்சென தெரிந்தது. (பல்லுக்குப் பாளிஸ் போட்டிருப்பாளோ)

அவன் அவளிடம் இங்கிலீஷில் பேசினான். அவள் அவனிடம் தமிழில் பதில் சொன்னாள். அவளுடைய போன் அடித்தது. அவள் அவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டே போன் அட்டெண்ட் செய்தாள். அப்படியே அமெரிக்கன் இங்கிலிஷில் அவள் பேசுவதைக்கேட்டு, அவனுக்கு கொஞ்சம் பிரமிப்பும் கொஞ்சம் பொறாமையும் கொஞ்சம் கோவமும் இப்படியாக ஒரு கலவை உணர்வு.

அவள் மீண்டும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டே அவன் எதிரில் உட்கார்ந்தாள். மீண்டும் அவன் கேள்விகளுக்கு பதில் சொல்ல தயாராக, "எதோ கேட்டீங்க?"

அவன் "இட்ஸ் ஒகே" என்று முடித்துக்கொண்டான்.

அவனுடைய நண்பர்களும் அவனும் சேர்ந்து தயாரித்த கேள்விகளில் இன்னும் பாதிக்கு மேல் பாக்கி இருக்கிறது. ஏனோ கேள்விகளைத் தொடர அவனுக்கு முடியவில்லை.

அவளுடன் முதல் டேட்டிங். அவள் அவனைக் கிஸ் செய்யக்கூட இடம் கொடுக்கலை. அவனுக்கு அது எரிச்சலாக வந்தது. அவன் படிப்பை முடித்தவுடன் வேலைக்கு அலைந்த போது குறைந்த வாடகையில் வீடு தேடிய அனுபவத்தைச் சொன்னான். அவள் ரசித்து கேட்க ஆரம்பித்தாள். அவனுக்கு இன்னும் ஒரு வருசத்திற்கு வீடு காலி யில்லை என்று சொன்ன ஏஜண்ட், அவனுடைய அமெரிக்கன் தோழி போன் செய்து கேட்டவுடன், உடனே வரச்சொல்லி அக்ரிமெண்ட் போட்டதையும், அவன் கண்முன்னாலேயே அவளுடன் அவனும் அந்த அபார்ட்மெண்டில் குடியேறியதையும், அப்போது அவனைக் கண்டும் காணாத மாதிரி நடந்துக்கொண்ட ஏஜண்டை மிமிக்கிரி செய்து காட்டினான்.

அவள் வாய்விட்டு சிரித்துக்கொண்டே இருந்தாள். "அப்புறம் என்னாச்சு?"

"எல்லாம் எங்கப்பனால வந்த வினை?"

அவள் கதை கேட்கும் ஆர்வத்தில் அவன் முகம் நோக்கினாள்.

"நான் ஊரில ஒரு வீடு வாங்கினேன். அதை எங்க இந்தியா ஆபிசில் வேலைப் பார்க்கிறவனுக்கு வாடகைக்கு விட்டிருந்தேன். எனக்கு அவன் யாரு என்னனு எல்லாம் எதுவும் தெரியாது. எல்லாம் த்ரூ ஆபீஸ்தான். அப்பாவுக்கு அவனோட சாதி தெரிஞ் சிப்போச்சு. சாதிக் கெட்டப் பயலுக்கெல்லாம் வீட்டை வாடகைக்கு கொடுக்கமாலாடாநு என்னைப் பாடா படுத்திட்டாரு. வேறு வழியில்ல, அவனை வீட்டு காலி பண்ணச் சொல்லிட்டேன். அவன் எங்கூட அபார்ட்மெண்டில் இருக்கிறவளோட டீமில்தான் இருக்கான். எப்படியோ இவளுக்கு நான் அவனைக் காலி பண்ணச் சொன்னதும் அதற்கான காரணமும் தெரிஞ்சுப் போச்சு. சனியன், வெள்ளப் பூசணி. அதில இவளுக்கு என்ன பிரச்சனை சொல்லு? என் பெட்டி, படுக்கை எல்லாம் எடுத்துவெளியில் வச்சிட்டா. எனக்கு எதுக்குனே முதல்ல தெரியல. பிறகுதான் எனக்கும் அவளுக்கும் தெரிஞ்ச இன்னொரு ப்ரண்ட் மூலமா தெரிஞ்சுது. எனக்கும் செம கோபம். இவளுக்கு என்ன வந்தது சொல்லு? நான் என் வீட்டை யாருக்கு வாடகைக்கு கொடுக்கனும், யாருக்கு கொடுக்க கூடாதுனு தீர்மானம் செய்துக்க இந்த வெள்ளெலி யாரு?"

அவன் சிகிரெட்டை எடுத்துப் புகைக்க ஆரம்பித்தான். அவள் தன் சூ லேஸை சரி செய்துகொண்டு கிளம்ப ஆரம்பித்தாள்.

இப்படியான தன் வீடு தேடிய கதையில், அவனுக்கு இன்னொரு அவமானமும் நடந்த மறுநாள்தான் அவளைப் பற்றி அவன் அம்மா போனில் பேசியதையும் மறக்காமல் சொன்னான்.

"அது என்ன கதை?" அவள் கேட்டாள்.

"அய்யோ, அது பெரிய கதை. எப்படியோ ஒரு ஆப்பிரிக்கன் அமெரிக்கன் குடியிருப்பில் வீடு குறைந்த வாடகையில். வீடும் ரோட்டைப் பார்த்து இருந்தது. சரி, கொஞ்ச நாளைக்கு அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம் என்று எண்ணிப் பார்க்கப் போனால், அந்த எருமை, அந்த முண்டம் சொல்கிறாள்: "வி ரெண்ட் அவர் அப்பார்ட்மெண்ட்ஸ் ஒன்லி டூ ஆப்பிரிக்கன் அமெரிக்கன். எவ்வளவு அவமானமா இருந்திச்சி தெரியுமா? அப்படியே எல்லாத்தையும் போட்டுட்டு ஊருக்கு கிளம்பிடலாமானு நினைச்சேன். இந்த வெள்ளை எலிகளும் கறுப்பு எலிகளும் சேர்ந்து இந்த அட்டகாசம் செய்யற இடத்திலே இருந்து ஏன் கஷ்டப்படனும் சொல்லு. "10 தலைமுறைக்கு சொத்து, வயக்காடு தோப்பு தொரவு கூப்பிட்ட குரலுக்கு ஓடி வந்து செய்துக்கொடுக்க ஆளு, இதை எல்லாம் விட்டுட்டு என்ன மயித்துக்கு அங்க கிடந்து

கஷ்டப்படுத ராசானு எங்கப்பா சொல்றது சரிதானு தோணிச்சு."

அவளுக்கு அவன் கோபத்தைக் கண்டு சிரிப்பு வந்தது. இதில் இவன் கோபப்பட என்ன காரணம் இருக்கிறது? இவனுக்கு கோபப்படக்கூட அருகதை கிடையாதுனு சொல்ல வந்த வார்த்தைகளை வாய்க்குள் அப்படியே போட்டு முழுங்கிக்கொண்டாள். (அம்மாவின் மைண்ட் வாய்ஸ் ஒலித்தது. "பையன் என்ன சொன்னாலும் சரிடீ, சிரிச்சிட்டே இரு)

அவள் தன்னுடைய வீடு தேடிய படலம் கதை கேட்டு சோர்வடைந்து விட்டதாக அவன் நினைத்தான். அவன் கார் சீராக அந்த ரோட்டில் ஓடிக்கொண்டிருந்தது. ஒரு பக்கம் சிறியதும் பெரியதுமான மலைக்குன்றுகள். வெண்பாறைகள். இன்னொரு பக்கம் விரிந்த பசிபிக் கடல். அவன் அவளுடன் சேர்ந்து அக்காட்சிகளை ரசிக்க நினைத்தான். அவள் கண்களை மூடியபடி கார்சீட்டில் தலைவைத்து சாய்ந்திருந்தாள்.

'தலையை அவன் தோள்களில் வைத்து சாய்ந்திருக்க, அவன் அவள் மூச்சுக் காற்றின் சூட்டை உறிஞ்சியபடியே காரை ஓட்டிக்கொண்டு வந்தால்', இத்தருணம் எவ்வளவு ரம்மியமானதாக இருக்கும் என்று நினைத்துப் பார்த்தான்.

அவள் தூங்குகிறாளா அல்லது அசதியா? எப்படி

எழுப்புவது என்ற யோசனையில் காரின் வேகம் குறைந்தது. “இங்கேதான் அருகில் ரெட் இண்டியன்ஸ் அதிகம் இருக்கிறார்கள். அவர்களின் சூப் பேரு என்னவோ மறந்திடுச்சி. பற ந்னு எதோ பேரு.”

“பற இல்ல அது. Paraguaya நு பேரு.”

அவள் திருத்தியது அவனுக்குப் பிடிக்கல. மீண்டும் அவன் ரெட் இண்டியன்ஸ் பற்றி பேச ஆரம்பித்தான். அவள் தலையைத் தூக்கி உட்கார்ந்தாள். பெருங்கடலின் அலைகள் ஈரமான காற்றை அவள் முகத்தில் தெளித்தன. அந்த ஈரம் அவளுக்குள் சிலிர்ப்பை ஏற்படுத்தியது. பெரிய சமுத்திரம். நீலமும் கறுப்புமாய் அவளுடன் கூடவே ஓடி வந்துக் கொண்டிருந்தது.

அவன் இப்போது இன்னொரு முறையும் ரெட் இண்டியன்ஸ் என்று ஏதொ சொல்ல வருவதற்குள் அவள் இடைமறித்தாள்: “They are not red Indians. They are native Americans.”

இப்போது அவன் காரை வளைவில் வேகமாகத் திருப்பினான். “தெரியும் எனக்கும். நம்ம ஸ்கூலில் எல்லாம் செவ்விந்தியர்கள் என்றுதான் படித்திருக்கிறோம், நினைவிருக்கா. மேடம் என்னவோ அமெரிக்காவிலேயே பொறந்து வளர்ந்த மாதிரி பேசுறீக.”

“லுக் அது ஒரு மிஸ்டேக். ஜியாகிரபிக்கல் மிஸ்டேக் ஆஃப் கொலம்பஸ்.”

“அப்போ நம்ம ஸ்கூலில் சொல்லிக் கொடுத்தது தப்புனு சொல்றியா?”

“ஸீ எது தப்பு எது தவறுனு இப்போ நமக்குப் புரியுது. அதை ஏன் திருத்திக்கக்கூடாது? யாரையாவது நாம ரெட் இண்டியன்ஸ்னு சொன்னா அப்போ ப்ளாக் இண்டியன்ஸூம் இருக்கிறதை நாமே அக்செப்ட் பண்ணிக்கிறோம்னு அர்த்தமாகல.”

“Oh, அப்போ நீ நான் சொல்றது தப்புங்கறே.”

“No, அதற்கான காரணத்தைச் சொல்றேன்.”

அவள் அதன்பின் அவனுடன் எதுவும் பேசவில்லை.

“அந்தச் சந்திப்பு எப்படி இருந்தது? பிடிச்சிருக்காடா” என்று அவன் அம்மா கேட்டாள்.

“முதலில் அவள் ரொம்ப கறுப்பா இருக்காம்மா” என்றான். அப்புறம், “அவ ரொம்ப பேசறாம்மா” என்றான்.

“போடா கறுப்பு சிவப்புனுக்கிட்டு. உங்க அப்பன் நல்ல கலரு. நான் கறுப்புதானேடா. நீ சிவப்பா பொறக்கல உங்க அப்பன் மாதிரி! நல்ல வாயாடிதாண்டா வரனும் நம்ம குடும்பத்துக்கு. அப்போதான் உங்க அப்பன் வீட்டு ஆட்கள் அடங்குவாக.”

அம்மா, அவன் சொன்ன இந்த இரண்டு காரணங்களையும் ஓவர் ரூல் செய்துவிட்டு நாள் குறித்துவிட்டாள்.

அவளின் அம்மாவும் அவளிடம் கேட்டுக்கொண்டே இருந்தாள். “முதல்லே சரின்னு சொன்னே, இப்போ என்னடானா யோசிக்க டைம் கேட்க? என்னடீ ஆச்சு? என்னாச்சு சொல்லுங்கறேன்ல.”

“ஒன்னுமில்லம்மா, ரொம்ப பிடிவாதமா எப்பவும் இருக்கான். தனக்குத்தான் எல்லாம் தெரியும்ங்கிற மாதிரி பேசறான். அப்படியே நம்ம ஊருக்காரன் புத்திதான் இருக்கு. என்னவோ இங்க படிச்சான், கிடிச்சான்னு நீ சொல்றே எனக்கு நம்பவே முடியல.”

“ஏண்டீ, நீ கண்ட கண்டதைப் படிச்சிட்டு அப்படி எல்லாம் அவனும் இருக்கனும்னு நினைக்கே. அவன் ராவா இருக்கான். இருக்கட்டுமே. கல்யாணம் பண்ணிக்கிறதுக்கும் பிள்ளைப் பெத்துக்கிறதுக்கும் அவன் ராவா இருந்தா என்ன? விவரமா இல்லாட்டி என்ன? புத்தகம் படிக்காட்டி என்ன? வந்துட்டா, இப்படியே எதாவது சொல்லிட்டே இருந்தேனா, எவண்டீ வருவான் உன்னைக் கட்டிக்க?”

“அம்மா!” அவள் அதட்டினாள்.

அம்மா அழ ஆரம்பித்தாள். அம்மாவின் அழுகை இம்முறை ரொம்பவும் நிஜமாக இருந்தது. அவள், “நெஞ்சு வெடிச்சிடும் போலிருக்கடி”னு சொன்னப்போ அவள் மூச்சுவிட கஷ்டப்பட்டதும் அவள் இதயம் வேகமாகத் துடித்ததும் அவளுக்கு கேட்டது. அவள் இறுதியாக போனை வைப்பதற்கு முன் சொன்னாள்: “எப்படியோ உன்னிஷ்டம் போல செய்.”

இதையே பச்சைக்கொடியாகக் காட்டி அவள் அம்மாவும் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்ய ஆரம்பித்தாள்.

இரவு உடையில் அருகில் வந்து எதுவுமே நடக்காத மாதிரி அவன் புரண்டு புரண்டு படுத்தான். அவள் தூங்கிக்கொண்டிருந்தாள்.

பெரிய மலையை எடுத்து அவளே பாம்பாகி அமிர்தம் கடைகிறாள். அந்தக் கரிய மலை. கம்பீரமாக உயர்ந்து உயர்ந்து பெரிதாகி பெரிதாகி; வாசுகி பாற்கடலைக் கடைந்தெடுக்கிறாள். நச்சுக்கோப்பையைக் கையில் ஏந்திக்கொண்டு அவளே அவன் அருகில் வருகிறாள். அவன் முத்தமிடுகிறான். அவள் இதழெங்கும் அமுதமே நஞ்சாக. வானமெங்கும் நீல மேகங்கள் கலைந்து செல்கின்றன. கருமேகங்கள் அவனைச் சுற்றி பேய்மழை பனி குளிர் அவன் பயத்தில் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்கிறான், அவளை நெருங்கி அவளருகில்.

அவள் கைபேசியில் எதோ மெசெஜ் பார்த்துக் கொண்டிருந்தாள். “தூங்கிட்டியோனு நினைச்சேன். கேட்கேன்லே காதில விழலை. ம்ம்.. கொஞ்சம் ஆபிஸ் வேலையா. ஆமா எவன்கிட்ட ச்சேட் பண்ணிட்டிருக்கே?”

“ப்ளீஸ் மை பாஸ் ஆன் தி லைன்.”

அவன் மீண்டும் போர்வைக்குள் அடங்கிப் போனான். ‘அவனிடம் இல்லாதது அப்படி என்ன உங்கிட்ட பெரிசா.. உங்கிட்ட பெரிசா..’ அவள் குரல் மலைகள் எங்கும் எதிரொலித்தது. பனிக்கட்டிகள் உருகி ஓடின. எரிமலைகளை யாரோ சீண்டி விட்டார்கள்.



அவன் வலுக்கட்டாயமாக அவள் முகத்தைத் திருப்பினான். அவள் எதுவும் சொல்லாமல் மவுனமாக புதைந்தாள். அவன் காரின் வேகம் அதிகரித்தது. இம்முறை ஆக்ஸிடெண்ட் ஆனாலும் பரவாயில்ல. இருளில் அவள் உடலின் மேடு பள்ளங்கள். அவன் இப்போது முரட்டுத்தனமாக காரை ஓட்டினான். அவள் எந்த எதிர்ப்பும் தெரிவிக்காமல் கட்டையாக படுத்திருந்தாள். அவனுடைய வேகம், அவனுடைய தீவிரம், புலியின் பாய்ச்சலில் அந்த அடர் வனம் தீயாக எரியட்டும் எரியட்டும்.

அவன் மேலும் மூர்க்கமாக, அவள் எதிர்வீட்டு பூனையை விரட்டிவிட்டு திரும்பி படுப்பது போல படுத்துக்கொண்டாள்.இப்போது அவனுக்கு மேல்மூச்சு வாங்கியது. காற்று ஊதிய பலூனை குழந்தை கையால் உடைத்து வாய்விட்டு சிரிப்பது போல, அவள் சிரிப்பது அவன் காதில் ஒலித்தது. சனியன், சிரிச்சிருக்கும். இன்னிக்கிப் பார்த்து இப்படி ஆயிடுச்சே. இல்லாட்டி நல்ல ஒரு பாடம் கற்பிச்சிருப்பேன். நான் யாருனு காட்டி இருப்பேன் அவளுக்கு.

போர்வைக்குள் சுருங்கிப் படுத்துக்கொண்டான். யாரோ அவனைக் கட்டிலில் இருந்து கீழே தள்ளுவது மாதிரி உண்ர்வு ஏற்பட்டது. நீண்ட கரிய கரங்கள். தடித்த உதடுகள். அவன் காலைத் தூக்கினா போதும் எல்லாம் பொடிப்பொடியாயிடும்.

'இராட்சசி இவள். "அவன மாதிரி உங்கிட்ட என்ன இருக்குனு?" கேட்டுட்டாளே. அப்படின்னா அவன்கிட்ட என்ன இருக்கு? அது எப்படி இருக்குனு இவ கண்டவதான். காமப்பிசாசு. இதை எப்படியும் அடக்கியே தீருவேன்.'

அந்தக் குளிரிலும் அவனுக்கு தாகமெடுத்தது. பெட் ரூமிலிருந்து கீழிறங்கி ஒரு க்ளாஸ் தண்ணீரைக் குடித்தான். அவனுக்கு மீண்டும் பெட் ரூமுக்குள் போகவே மூட் இல்லை. கீழே இருந்த சோபாவில் படுத்துக் கொண்டான். யாரோ படிக்கட்டில் ஏறுவது தெரிந்தது. அவளை அப்படியே அலக்காக தூக்கிக்கொண்டு அந்தக் கரிய உருவம் படிகளில் இறங்கி வருகிறது. கூந்தல் ஊஞ்சல் போல ஆடிக்கொண்டிருக்கிறது.

கண்கள் மயக்கத்துடன் அவள் சரிந்திருக்கிறாள். அவன் தொடைகளில் அவள் உட்கார்ந்திருக்கிறாள். அவன் அவள் மார்பில் ஓவியம் வரைந்து கொண்டிருக்கிறான். பூனை ஒன்று சுவர் ஏறி குதித்து ஓடுகிறது.

அவன் தூக்கமே வராமல் புரண்டு படுக்கிறான். இப்போது கட்டில் மெல்ல மெல்ல காற்றில் பறக்கிறது. ஆகாயத்திற்குள் இருவரும் மறைகிறார்கள். அவன் அவளை முத்தமிடும் சப்தம். அவள் போதும் போதும் என்று.

"அடப்பாவீ பாவீ மவளே." அவன் அடித்துப் புரண்டு கொண்டு மாடிப்படி ஏறி படுக்கை அறைக்கு ஓடினான். அவள் பக்கத்தில் அதே அந்தக் கரியவன் படுத்திருப்பது மாதிரி தெரிந்தது. அவன் வேகமாகப் போய் போர்வையை எடுத்து உதறினான். அவள் தூக்கக் கலக்கத்தில் போர்வையை அவனிடமிருந்து இழுத்து போர்த்திக்கொண்டாள்.

அவனுக்கு இப்போது அழகை வந்தது. ஆம்பிளப் பிள்ளையா லட்சணமா இரு. எதுக்கு அழறே இப்போ. கூட்டமா அவன் ஊரே கூடி இருந்து சொல்றது மாதி, இருட்டைக் கிழித்துக் கொண்டு.

சுந்தாமோனிகா மவுண்டன் மலிஃப்பு கோவிலில் இருவரும் பார்வதி தேவியின் சன்னிதானத்தில் கண்ணை மூடிக்கொண்டு பக்தியுடன் தேவியைக் கும்பிடுகிறார்கள். தேவியின் கண்களில் உயிரின் ஜீவன். துடித்துக்கொண்டு. சர்வ அலங்காரத்தில் மூக்கூத்தி மின்ன அவள் அழகு, அவள் கம்பீரம், அவள் பார்வை, அம்மாடியோவ், கரும் சிலையாக தேவி மின்னிக்கொண்டு இருந்தாள்.

அர்ச்சகர், "பிதுர் தேவி பிதுஸ்ரேஷ்டே.." என்று ஆரம்பித்து, "சாபத்யாம் ரக்ஷ கர்ப்பிணீம்||" என்று மந்திரம் சொல்லி அர்ச்சணைத் தட்டை நீட்டினார். அவன் 20 டாலர் நோட்டை தட்டில் போட்டுவிட்டு கைகள் நடுங்க கும்பிட்டான். தேவி குழப்பத்தில் அவர்களைப் பார்த்தாள். தன் அம்மாவைப் போல கறுப்பா பொண்ணு பிறந்திடக்கூடாதுனு அப்பன்காரன் கும்பிடறான். தன்னைப் போல கறுப்பா பொறந்து கஷ்டப்பட்டிடக்கூடாதுனு தாய்க்காரி கும்பிடறா.

"நான் எங்கேபோவேன்?" தேவியின் கருஞ்சிலையில் வேர்வைத் துளிகள். பச்சைக்கிளி பரிதவித்தது. ●

**புதிய மாதவி <puthiyamaadhavi@hotmail.com>**

எழுத்தாளர்களின் மறுபக்கம்--2

# எழுபது வயதில் குட்டித் தேவதைகளை வழிபட்ட டாம் சாயர்!

**ஸிந்துஜா**

உலகப் புகழ்பெற்ற 'ஹக்கிள்பெரிஃபின்', 'டாம் சாயர்' நாவல்களில் கதாநாயகர்களாக வந்து, லட்சக்கணக்கான மக்களின் உள்ளங்களைக் கொள்ளைகொண்ட சிறுவர்களைப் படைத்து உலவவிட்டவர் மார்க் ட்வெய்ன்.

அவருக்கு அப்போது வயது எழுபது. மங்கைப் பருவத்திலிருந்த (11-14 வயது) சிறுமிகளைக் 'குட்டித் தேவதைகள்' என்று கொண்டாடி 'சேகரிக்க' முயன்றபோது, அதை எதிர்த்தவர்களிடம் அவர்கள் தனது பேத்தியைப் போன்றவர்கள் என்று மார்க் ட்வெய்ன் அடக்கினார். அவருடைய சொந்த மகள்கள் அப்போது பெரியவர்களாகி விட்டார்கள். அவருடைய செல்ல மகள் சூசி இறந்திருந்தார். "இந்தப் பெண் குழந்தைகளை எனக்கு மிகவும் பிடித்திருப்பதற்குக் காரணம் அவர்கள் அழகும் இனிமையும் கொண்டவர்கள். கபடற்றவர்கள். வாழ்வின் உன்னதங்களைத் தெரிவிக்கும் தேவதைகள். வாழ்க்கையின் காயங்கள், வலிகள், கசப்புகள் கண்ணீர்த் துளிகள் ஆகிய எவற்றையும் சந்தித்திராத அதிர்ஷ்டசாலிகள் என்பதினால்தான்" என்றார்.

அந்த மங்கைகள் கபடமற்றவர்கள்தான். ஆனால், முட்டாள்கள் அல்ல. அவர்களுக்கு மார்க் ட்வெய்ன் புகழ்பெற்ற பிரமுகர் என்று தெரிந்திருந்தது. பதினைந்து வயதான ஜேர்ட்ரே நாட்கின் என்னும் மடந்தை அவர் கார்னகி ஹாலில் நடந்த ஒரு இசைக் கச்சேரிக்கு வந்துவிட்டு செல்லும்போது அவரைப் பார்த்தாள். மார்க் ட்வெய்ன் அப்போது புகழின் உச்சியில் இருந்தார். அவரும் ஜேர்ட்ரே தன்னுடன் பேச விரும்புவதைக் கவனித்து அவளைப் பார்த்துக் கையசைத்தார். தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு அவளுடன் கை குலுக்கினார். மறுநாள் அவள் அவருக்கு எழுதிய கடிதத்தில், "நான் உங்களைத் தெரிந்துகொண்டதில் எனக்குப் பெரும் மகிழ்ச்சி. நான் ஒரு கீழ்ப்படியும் மாணவி. உங்களை விரும்புபவர்களில் ஒருத்தி" என்று கூறியிருந்தாள்.



அவர்களிடையே நடந்த கடிதப் பரிமாற்றத்தில் ஒருவித சரசம் இருந்தது. அவர் அவளை 'லிட்டில் பிச்' என்று செல்லமாக அழைத்தார். அவள் அவரைப் பதிலுக்கு 'டார்லிங்' என்றாள்! அவர், அவளுக்கு எழுதிய கடிதங்களை 'அன்பு முத்தங்களுடன்' என்று முடிப்பார். ஒருநாள் அவள் தனக்குப் பதினாறு ஆகிவிட்டது என்றதும், "இனிமேல் உனக்கு முத்தங்கள் என்று எனக்கு எழுத அச்சமாயிருக்கிறது. நீ உன்னுடைய பதினாலாவது வயதுக்குப் போய் விடு! அப்போது எல்லை மீறல் என்ற பேச்சுக்கே இடமிருக்காது!" என்று கிண்டலாகப் பதில் எழுதினர். அத்துடன் அவர்களுடைய தொடர்புக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. மார்க் ட்வெய்ன் மற்ற இளம் மங்கைகளைத் தேட ஆரம்பித்தார்.

விடுமுறைக்கு அவர் பெர்முடா செல்வது வழக்கம். அப்பயணங்களில் சந்தித்தவர்களின் குழந்தைகள் மீது நட்புப் பூண ஆரம்பித்தார். சுமார் பத்து மங்கைகளைத் தேர்ந்தெடுத்து அவர் நடத்தி வந்த மீன் பண்ணையில் (Acquarium) அவர்களை உறுப்பினர்களாக்கினார். அவர்களுடன் அவர் ஏற்படுத்திக்கொண்ட கடிதப் போக்குவரத்தின் எண்ணிக்கையைப் பார்த்து அயர்ந்துபோன அவரது நெருங்கிய நண்பர், "கடித இலக்கியம் என்று ஒரு புத்தகம் நீ போட்டால் அதில் பெரிதும் இவைகளேதான் நிரம்பி இருக்கும்" என்று அவரைக் கேலி செய்தார்.

அவருடைய இந்த மீன் பண்ணை பிரபலம் வாய்ந்த ஒன்றாக விளங்கிற்று. இதில் உறுப்பினராக இளம்பெண்களும் போட்டி போட்டனர். ஒருத்தி பனிரெண்டு வயதுச் சிறுமி போல உடை அணிந்துகொண்டு வந்து இடம்பிடிக்க முயன்று தோற்றுப் போனாள். உறுப்பினர்களாக இருந்த சிறுமிகளுக்குத் தனித்த உடைகளை வழங்கினார், அவர்கள் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டிருக்க வேண்டும் என்று. அவர்கள் அணிந்திருந்த ஆடைகளின் இடது மார்புப் பகுதியில் எனாமல் லேபில்கள் தைக்கப்பட்டிருந்தன. அவர்களைத் தனது கனெக்டிகட் மாளிகைக்கு - அதன் பெயர் களங்கமற்ற இல்லம் (Innocence At Home) வர அழைப்பு விடுத்தார்.

ட்வெய்ன் அவருடைய சுயசரிதையில், 'எவ்வாறு இந்தக் குட்டித் தேவதைகளைக் கண்டுபிடித்தேன்?' என்று எழுதியிருக்கிறார்:"பெர்முடாவில் ஒருநாள் நான் காலை உணவுக்கு டைனிங் அறைக்குச் சென்றேன். அந்த நீண்ட அறையில் சிறுமி ஒருத்தி இரண்டு பேருக்கான சாப்பாட்டு மேஜைக்கு முன்னால் தனியே உட்கார்ந்திருந்தாள். நான் அவள் கன்னத்தை நிமிண்டி, "எதற்காக இந்தக் குட்டிப் பெண் தனியாக உட்கார்ந்து கொண்டிருக்கிறது? நீ மட்டும் தனியே பிரேக் பாஸ்ட் சாப்பிடப் போகிறாயா?" என்று சிரித்தபடியே கேட்டேன். சாப்பிட்ட பிறகு பிரிந்து சென்ற நான்



மறுபடியும் அன்று அவளைச் சந்தித்தேன். நாங்கள் இருவரும் பிரிக்க முடியாத தோழர்களாகிவிட்டோம் அடுத்த எட்டு நாட்களுக்கும்."

மார்க் ட்வெய்னின் நண்பர் இதைப் பற்றிப் பேசுகையில், "அந்தச் சிறுமி அவருக்குத் திருமணமாகிவிட்டதா என்று கேட்டாள். அவரது மனைவி இறந்துவிட்டாள் என்று கேட்டதும் நான் மட்டும் அவரது மனைவியாக இருந்தால் அவரை விட்டு ஒரு நிமிடமும் பிரிந்து இருக்கமாட்டேன். அவரருகே இருந்து அவருக்குப் பணியாற்றுவேன் என்றாள்" என்று ட்வெயினிடம் கூறினார். அதற்கு அவர், "இது அந்தச் சிறுமியின் மனதில் ஆழப் பதிந்திருக்கும் தாய்மை உணர்வைக் காண்பிக்கிறது. இத்தகைய அன்புக்கு நான் மண்டியிட்டு அடிமையாக வாழத் தயார்" என்றாராம்.

ஐரோப்பாவில் கலை நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்த அவரது இரண்டாவது பெண் கிளாரா, தன்னுடைய சுற்றுப் பயணத்தை முடித்துக்கொண்டு ஒரு தடவை தந்தையைப் பார்க்க வந்தபோது அவரைச் சுற்றியிருந்த சிறுமிகளின் கூட்டத்தைப் பார்த்து அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர்கள் இனிமேல் ட்வெய்னின் வீட்டுக்குள் காலடி எடுத்து வைக்கக் கூடாது என்று துரத்தி அடித்துவிட்டாள். அப்போது உயிருடனிருந்த அவளுடைய தங்கை ஜீன் மீதும் தன் மீதும் காட்டாத பாசத்தை எப்படி அவர் இந்தக் குழந்தைகளின் மீது செலுத்தலாம் என்று அவருடன் சண்டை போட்டாள்.

மார்க் ட்வெயினுக்கு இது சற்றும் பிடிக்கவில்லை. நாளடைவில் அவர் தனக்கு உடல் நலம் சரியில்லை என்று புகார் செய்ய ஆரம்பித்தார். இறப்பதற்குச் சில காலம் முன்பு எழுதிய குறிப்புகளில் இந்தச் சிறு பெண்கள் மீண்டும் வர ஆரம்பித்தனர்! பதினைந்து வயது நிரம்பிய



ஹெலன் ஆலன் என்பவளைப் பற்றி எழுதுகையில், "அவள் மிகவும் சுறுசுறுப்பானவள். கெட்டிக்காரி. உயிரோட்டம் நிறைந்த நடை, உடை பாவனைகள் கொண்டவள். மன உறுதி மிக்கவள்" என்று எழுதினர். ஆனால், அவள் தனக்குக் கவிதைகள் பிடிக்காது என்று சொன்னதில் அவர் மிகவும் ஏமாற்றமடைந்தார். அவரது புத்திசாலித்தனமான கூர்மையான பேச்சுக்களால் அவள் கவரப்படாதிருந்தாள். இவை எல்லாவற்றையும்விட அவள் தனது பாய் ஃபிரெண்டுடன் ஒட்டிக்கொண்டு திரிந்தது அவருக்கு





சுத்தமாகப் பிடிக்கவில்லை. 'அவன் உன்னுடைய கபடற்ற உள்ளத்தைப் புரிந்துகொண்டவனாகத் தெரியவில்லை. அவனை விட்டு விலகி இரு' என்று அறிவுறுத்தினார்.

மார்க் ட்வெய்னின் அந்தரங்கத்தில் அவருக்குத் தன்னை வயோதிகனாகப் பார்க்கப் பிடிக்கவில்லை. அவர் உருவாக்கிய ஹக்கிள்பெரிஃபின்னைப் போலவும் டாம் சாயரைப் போலவும் எப்போதும் இளைஞனாகத் திரிய வேண்டும் என்ற உள்ளாசையை அவரால் தவிர்க்க முடியவில்லை. இதன் நீட்சியாக அவரது ஆர்வம் இளம் பருவத்துச் சிறுமிகள் மீது, சற்றே காமம் கலந்த காதலில் இழைந்தது. ஹெலன் ஆலன் பற்றிய அவரது குறிப்புகளைப் படிக்கும் ஒருவர், அவரைச் சிறுமிகளின் பாதுகாவலராகவும், அவர்களை வளர்ப்பவராகவும், அவர்களது பாட்டனாராகவும் மக்கள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அவர் விரும்பியதைப் பார்க்க முடியும். ஒரு தடவை பேசுகையில், "அதிகாலை இரண்டு மணிக்கு நான் தளர்ந்த கிழவனைப் போல உணருகிறேன். ஆனால், காலை எட்டு மணிக்கு ஷேவ் செய்துகொள்ளும் போது எனக்கு என்னவோ 25 வயதுதான் ஆகின்றது என்பதுபோல, என் தேடலில் ஏற்படும் கஷ்டங்களை எதிர்கொள்ளும் மனதிடம் பெறுகிறேன்" என்றார்.

1905இல் பிராட்வேயில் நடந்த 'பீட்டர் பான்' நாடகம் அவரை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. ஸ்காட்லாந்தைச் சேர்ந்த ஜே.எம். பார்ரி எழுதிய புகழ் பெற்ற இந்த நாவலின் கதாநாயகன் பீட்டர் பானுக்குப் பனிரெண்டு பதிமூன்று வயது. அவனிடம் பறந்து செல்லும் திறமை இருக்கிறது. அவன் தனக்கு எப்போதும் வயதாகிவிடக் கூடாது என்ற மனநிலையில் சாகசங்கள் புரிகிறான் என்பது கதை. "என் ஆசையெல்லாம் எனக்குப் பீட்டர் பானைப் போல நிரந்தர இளமை வேண்டும்" என்றார் மார்க் ட்வெய்ன்.

அவருக்கு மார்க்கண்டேயனைப் பற்றித் தெரிந்திருந்தால் பீட்டர் பானை ஒதுக்கியிருப்பார்! ●

**ஸிந்துஜா <weenvy@gmail.com>**

# எம். ரிஷான் ஷெரீப் கவிதைகள்

**ஓவியம்: Emilio Sanchez**



## பூ வாடை மீன்கள்

பனிக்காலத்தின் வெண்குதிரையாய்
தூரத்தே ரயிலோசை
மந்தமாக ஒலித்தோயும் அமாவாசை இரவில்
வள்ளத்தின் மறு விளிம்பு தாங்கி நிற்கும்
லாந்தர் விளக்கின் ஒளி
தண்ணீரின் மேற்பரப்பில்
மீனென நீந்தி வருகிறது

தூண்டிலையிட்டுக் காத்திருக்கும்
மீனவக் கிழவன்
சலனங்களைக் கூர்ந்தறிகிறான்

இது கரையோர முதிர்மரத்தின்
இலை விழும் ஓசை
இது நீர்ப் பாம்பின் அசைவில்
தவளைகளின் பாஷை
இது ராப் பூச்சிகளின் ரீங்காரம்
இந்த இடத்தில் தண்ணீரின் வேகப் பயணம்

இவற்றுள் எவ்விடத்திலும் இல்லை
இரையைக் கொத்தும்
மீன்களின் சலனம்

முந்தைய நாளின் இறுதிச் சடங்கொன்றில் கலந்து
நதியில் எறியப்பட்டு மிதந்து
நீரின் மணற்பரப்பில் தேங்கிய பூக்கள்
கிழவனிடம் சேர்கின்றன
தூண்டிலின் முனையில் சிக்கி
ஒவ்வொன்றாக

அகாலத்தில் மரித்த பூக்களை
மீன்களுக்கான மூங்கில் கூடையிலிடுகிறான்
இந் நள்ளிரவுக்குப் பின்னர் பிடிபடும் மீன்கள்
கண நேரம்
தூண்டில் முள்ளின் வலியை மறக்கக் கூடும்
இப் பூக்களின் நறுமணத்தில்
இவற்றின் மென்மையான மேற்பரப்பில்

## கடல் தீர்க்காத் தாகம்

படகுகள் செந்நாரைக் கூட்டங்களென மிதக்கும்
நீர்ப் பரப்பைப் பார்த்தவாறு
மீன்கூடைகளைச் சுமந்து வந்த வண்டி மாடு
தாகத்தில் இளைக்கிறது

மீனவர்களுக்கும் வண்டியோட்டிக்குமிடையே
எவ்விதப் பாஷையுமில்லை
படகுகள் கரையேறுகின்றன
மூங்கில் கூடைகளில் மீன்கள் நிரம்புகின்றன

உப்புக் காற்றில்
இன்னும் தாகித்தே கிடக்கிறது எருது

## பசிய சர்ப்பங்களின் நிழலில்

யாரும் காணாத் தொலைவில்
பள்ளத்தாக்கில் விழுந்த வண்டி
ஆண்டாண்டு காலமாக துருப்பிடித்தே கிடக்கிறது



மழை நனைக்கும்
மணற்புயல் புழுதி வாரித்தூற்றும்
சிதைந்த வண்டியின் சக்கரங்கள்
எங்கும் தப்பியோடாது
புற்தரையில் படுத்திருக்கும்

எவரும் தேடி வரா வாகனத்தினுள்ளிருந்த
எலும்புக் கூடுகளிரண்டின் மீதும் பச்சைக் கொடிகள்
சர்ப்பங்களெனப் படர்ந்து பார்த்திருக்கின்றன
ஆதாம் அல்லது ஏவாள்
கொடிக்கனியைத் தீண்டும்வரைக்கும்

## நகர மழைக் குறிப்பு

நெடிதுயர்ந்த கட்டடத்தின் மேற்பரப்பில் தரித்து
ஓய்வெடுக்கிறது மேகக் கூட்டம்

தம் மூதாதையரின்
மலைத் தொடர்கள் பற்றிய கதைகளை
அது கனவிலும் மறக்கவில்லை

மலைகள் தொலைந்து மரங்கள் அழிந்து
எங்கும் கட்டடங்களாகி விட்டிருக்கும்
முன்னாள் காட்டில்
கடும்புழுதியில் உறங்க வேண்டியிருக்கும்
நிர்ப்பந்தம் குறித்து
தூறலாக சிணுங்கிக் கொண்டேயிருந்தது மேகம்

திரவமாகிக் கரைந்ததும்
ஒழுகித் தீர்ந்த காலத்தின் முடிவில்
வெளியெங்கும் ஈரம்

மேலும்
இருண்டு விட்டிருந்தது காலம் ●

**எம். ரிஷான் ஷெரீப் <mrishansha@gmail.com>**

## ஜூன் மாத அம்ருதா:
# இரண்டு குறிப்புகள்

**அ. ராமசாமி**

**குறிப்பு 1: தமிழில் ஐரோப்பியக் கதை**

ஜூன் மாத 'அம்ருதா' இதழில் அச்சிடப்பெற்றுள்ள 'சாதனா'வின், 'சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்' என்ற கதையைத் தமிழில் எழுதப்பெற்ற ஐரோப்பியக் கதை என்று சொல்லலாம். ஐரோப்பியக் குடும்பங்கள் உருவாக்கும் மன அமைப்புகள் தமிழ் மனிதர்களுக்குள்ளும் உருவாகிவரும் சூழலில் இப்படிச் சொல்வதும் வகைப்படுத்துவதும்கூடச் சரியில்லைதான். மொழியைப் பயன்படுத்துவதில் சிக்கல்களைச் சந்தித்துள்ள சாதனாவின் இந்தப் பிரதியைக் கதை என்று சொல்லும்போது அதற்குள் செயல்பட்டுள்ள நாடகமொழியும் காட்சிப் பிரிவுகளும் கதையல்ல; நாடகம் என்கிறது. மொழிச் சிக்கல்களைக் குறித்துத் தனியாக எழுத வேண்டும். சோதனை எழுத்துகளை முன்னெடுக்கும் அம்ருதாவின் பணி பாராட்டத்தக்கது.

என்றொரு குறிப்பை எனது முகநூல் பக்கத்தில் எழுதினேன். எனக்குவரும் மாத இதழ்களில் நான் வாசிக்கும் கதைகள் பற்றிய முகநூல் குறிப்புகளுக்குப் பெரும்பாலும் விருப்பக் குறிகள் வருமேயொழிய விவாதிக்கும் வினாக்களோ எதிர்வினைகளோ வருவதில்லை. ஆனால், இந்தக் கதைக்கு எழுதிய குறிப்பின் மீது 'பார்வதி ஓமக்குட்டன்' என்பவர் பின்வருமாறு எதிர்வினையாற்றினார். அவரோடு நடந்த உரையாடலை இங்கே தரலாம் என்று நினைக்கிறேன். அந்த உரையாடலில் கவி. கருணாகரனும் கூடக் கலந்துகொண்டார். அதுவருமாறு:



*பார்வதி ஓமக்குட்டன்:* *இக்கதையை ரஷ்ய நிலப்பரப்பில் நிகழும் கதையாக நாம் எடுத்துக்கொள்வதற்கு போதிய ஆதாரங்களிருந்தாலும் கதைசொல்லி ஓரிடத்திலும்கூட இது ரஷ்யாதானென குறிப்பிடவில்லை. இருந்தாலும் கதையின் நிலப்பரப்பு ரஷ்யாதான். அதில் மாற்றுக் கருத்தில்லை. இப்போது என் கேள்வி என்னவெனில், ரஷ்ய நகரங்களான மாஸ்கோ, பிட்டர்ஸ்பேர்க் போன்ற ஒரு சில நகர்கள் கிழக்கு ஐரோப்பிய பகுதிக்குள் அடங்கினாலும், ரஷ்யாவின் பெரும்பாலான நூற்றுக்கு எண்பது விழுக்காடு நகரங்கள் ஆசிய நிலப்பரப்புக்குள்ளேயே அடங்குகிறது. இதனால்தான் உலகின் மிகப்பெரிய கண்டமாக ஆசியக் கண்டம் இருக்கிறது. 'சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்?' சிறுகதை ரஷ்ய நிலப்பரப்பில் நடைப்பெறும் கதையாக யூகிப்பதற்கு ஏதுவான காரணங்களிருந்தாலும் கதை ரஷ்யாவின் எந்தப் பகுதியில் நடைபெறுகிறது என்பதற்கு அல்லது யூகிப்பதற்கு துளிகூட ஏதுவானவை எதுவுமில்லை.*

*விஷயம் இப்படியிருக்க 'சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்?' சிறுகதையை தமிழில் எழுதப்பட்ட ஐரோப்பியச் சிறுகதை என உங்களால் எப்படி வகைப்படுத்த முடிந்தது.*

*நான்:* *பெயர் குறிப்பிட்டுக் காட்டப்படவில்லை என்றாலும் பனியும் பனிசார்ந்த நிலமும் கதைவெளியாக இருக்கிறது. பிரெஞ்ச் நாடகத்தை ரஷ்யனில் மொழிபெயர்த்து நடிக்கிறார்கள் என்றொரு குறிப்பு கதையில் உள்ளது. பாத்திரங்கள் எல்லாமும் ரஷ்யப் பெயர்கள்தான். ரஷ்யப் பெயரோடு திருநெல்வேலியில்கூட மனிதர்கள் இருக்கலாம். ஆனால், அவர்களின் மன அமைப்பும் எடுக்கும் முடிவுகளும் வெளிப்பாடுகளும் தேசங்களோடும் கண்டங்களோடும் தொடர்புடையன. ரஷ்யாவின் பெரும்பரப்பு ஆசியக் கண்டத்திற்குள் இருந்தாலும் அவர்கள் ஐரோப்பிய மனநிலையாளர்கள்தான்.*

*பார்வதி ஓமக்குட்டன்:* *அது சரி. ஆனால், நான் வினவுவது மாஸ்கோ, பிட்டர்ஸ்பேர்க் போன்ற நகர்கள் ஐரோப்பாவுக்குள் அமைந்தாலும் ரஷ்யா என்பது பொதுவாக ஆசியக்கண்டத்தையே சாரும். முக்கியமாக ரஷ்யாவின் கிழக்குப் பகுதி முழுக்க முழுக்க ஆசியக் கண்டத்துக்குள்ளேயே வருகிறது. இப்படியிருக்க நீங்கள் எப்படி இக்கதையை ஐரோப்பிய சிறுகதை எனலாம்?*

*நான்:* *சிகரெட் பிடிப்பதைக் குற்றவுணர்வின்றிச் செய்வதும், வெறுப்பு மிகுந்த நிலையிலும் புணர்ச்சியை அனுமதிப்பதுமான அவளது செயல்பாடுகள் ஐரோப்பியத் தனம். அதேபோல் போதும் இனிப் பிரிந்துவிடலாம் என முகத்துக்கு நேரே சொல்வதும், அவரவர் நிலைபாட்டைச் சுயபரிசோதனை செய்து முன்னிலை மனிதர்களிடம் முன்வைத்து விவாதிப்பதும் ஆசியர்களின் - அதிலும் ஆசியப் பெண்களின் தன்னிலை வெளிப்பாடு அல்ல.*

*புனைவின் அடிப்படைக்கூறுகளான வெளி, காலம், பாத்திரங்கள் என்ற மூன்றில் முதன்மையாகக் கவனிக்க வேண்டியது பாத்திரங்களின் மன அமைப்புதான். அதற்குத் துணை செய்வனவே*

சிறுகதை

## சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்?

சாதனா

ஓவியம்: Oswaldo Guayasamín

குரோசியாவாக வேடமிட்டிருந்த சோஃபியாவின் கண்களுக்குக் கீழாகச் சற்றுக் கறுத்திருந்தது. அதை மறைப்பதற்காக பவுடரை ஒற்றி ஒற்றி எடுத்தாள். கூர்ந்து கவனித்தபோது அப்போதும் கருமை தெரிவதாகவே அவளுக்குப் பட்டது. பாதங்களினால் தன்னைத்தானே எழுப்பி கண்ணாடிக்கு அருகாக முகத்தைக் கொடுத்தவள், விரல்களினால் கண்களுக்குக் கீழாக வருடினாள்.

அவளுக்கு அழுகை வந்தது. மேசையில் கைகளை ஊன்றிக்கொண்டு அழத்தொடங்கினாள். பின், சட்டென்று அழுகையை நிறுத்திக்கொண்டவள், நிமிர்ந்து கண்ணாடியைப் பார்த்தாள். அவள் அழுத அழுகையின் கண்ணீரானது அவள் முகத்தில் போடப்பட்டிருந்த ஒப்பனையை சற்றுக் கலைத்திருந்தது. கைகளினால் தேய்த்து ஒப்பனையைச் சரி செய்தவள், தன்னைத் தானே மேலிருந்து கீழாகப் பார்த்துக்கொண்டாள். தான் அணிந்திருந்த அந்த நீண்ட வெள்ளை நிறப் பாவாடை சற்று தூக்கியிருப்பது போல் தோன்றவே அதைக் கைகளால் தேய்த்து எடுத்தாள். அப்போதும் தூக்கிக் கொண்டுதான் இருந்தது.

சுவரில் பொருத்தப்பட்டிருந்த கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தாள். இன்னும் இரண்டு நிமிடங்கள்தான் இருக்கிறது. சற்றுத் தாமதித்தாலும் படுகேவலமான தூசண வார்த்தைகளால் பவுல்விச் திட்டுவான். அவனுக்கு எல்லாம் நேர்த்தியாகவும் நேர ஒழுங்கோடும் இருக்க வேண்டும்.

ஒரு பரபரப்போடு அந்த மிகச்சிறிய ஒப்பனை அறையைவிட்டு வெளியேற நினைத்தவள், என்ன நினைத்தாளோ... மறுபடியும் வேகமாய் ஓடி வந்து, கண்ணாடிக்கு முன் நின்றுகொண்டு தன்னை முழுவதுமாய் பார்த்தாள். திருப்தியாய் படவே கணுக்கால் வரை நீண்டிருந்த பாவாடையை தன் இரண்டு கைகளினாலும் தூக்கிக்கொண்டு அந்த அறையைவிட்டு வெளியேறலானாள்.



வெளியே, சோஃபியாவைக் கண்டதும் பவுல்விச் சற்று முகம் மாறினான். “இப்போதுதான் வருகிறாயா; போன வாரமே நான் உனக்கு அறிவுறுத்தியிருந்தேன் அல்லவா?” என்றான்.

அவ்வளவுசீக்கிரம்பவுல்விச்சைசோஃபியா எதிர்பார்க்கவில்லை. தாமதத்திற்கு ஏதாவது காரணம் சொல்லித்தான் ஆகவேண்டும். இல்லையென்றால் விடமாட்டான். “மன்னித்துவிடுங்கள்... திரு. பவுல்விச் நகோவ், தாமதமாக வரவேண்டுமென நான் ஒருநாளும் விரும்பியதில்லை. ஆனால், என்னுடைய புறச்சூழல் சொல்லிக்கொள்ளும்படியில்லை. அதுவே என் இன்றைய தாமதத்துக்கும் காரணம்” என்றாள். சோஃபியா அவ்வாறு சொல்லும்போது அவள் கண்கள் பவுல்விச்சையே பார்த்துக்கொண்டிருந்தன.

ஆனால், சோஃபியா கூறியதை பவுல்விச் செவிமடுத்தானில்லை. அவன், தன்னுடைய கைகளிலிருந்த நாடகம் எழுதப்பட்டிருந்த பிரதிகளைச் செப்பனிடுவதிலேயே குறியாக இருந்தான். அப்படிச் செப்பனிடும்போது அவன் உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. அவன் ஏதோ கோபத்திலிருக்கிறான் என்பதை சோஃபியா உணர்ந்துகொண்டாள். தான் கூறிய காரணத்தை அவன் ஒருபோதும் நம்பப் போவதில்லை. நான் பொய் சொல்வதாகவே அவன் நினைப்பான். ஏற்கனவே கோபத்திலிருக்கும் அவன் இதனால் இன்னும் எரிச்சல்படக் கூடும். ஆகவே, இப்போதைக்கு இந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிடுவதுதான் சரியென்று அவளுக்குத் தோன்றிற்று.

பவுல்விச்சை விட்டு விலகி அப்பால் நடந்தாள். அப்படி விலகிச் செல்லும்போது பவுல்விச் தன்னை மறுபடியும் அழைத்துவிடுவானோ என அச்சமடைந்தாள். நல்லவேளையாக... பவுல்விச் அவளை மறுபடியும் அழைக்கவில்லை. ஆறுதலடைந்த சோஃபியா திரைச்சீலையை விலத்தி மேடையை அடைந்தாள்.

மூன்றாவது வாரமாகவும் ‘குரோசியாவும் வேலைக்கார பெண்களும்‘ நாடகம் இன்று அரங்கேற்றப்படுகிறது. ‘Croatie et femmes servantes’ என்ற ஃபிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட நாடகத்தையே அவர்கள் ரஷ்யமொழியில் மொழிபெயர்த்திருந்தார்கள். கதையின்படிக்கு சோஃபியா எஜமானி. அதாவது குரோசியா. அக்லேயாவும் ஸென்னியும் குரோசியாவின் வேலைக்காரப் பெண்கள். சோஃபியாவை கண்டதும் அக்லேயாவும் ஸென்னியும் புன்னகைத்துக் கொண்டார்கள். அவர்கள் ஏற்கனவே தங்களை தயார்படுத்தியிருந்தார்கள். அவர்கள் இருவரும் வெள்ளைநிறத்திலான கவுணொன்றையும் அதை மூடினாற்போல் நீல நிறத்திலான அங்கி ஒன்றையும் காலுக்கு முழங்கால் வரை நீண்டிருந்த காலுறைகளையும் கருப்பு நிறச் சப்பாத்துக்களையும் அணிந்திருந்தார்கள். இருவரின் தலைகளிலும் வேலைக்காரிகள் அணியும் தொப்பி.

ஸென்னி அன்று மிதமிஞ்சிய அழகுடன் இருப்பதுபோல் சோஃபியாவுக்குப் படவே, அதை அவளிடம் கூறினாள். புன்னகைத்துக்கொண்டவளான ஸென்னி, “நன்றி” என்றாள். ஸென்னி சோஃபியாவின் நல்ல தோழிகளில் ஒருத்தி என்று சொல்லிவிட முடியாது. ஆனால், அக்லேயாவுடன் ஒப்பிடும்போது ஸென்னி நல்லவளென்று சோஃபியா நினைத்தாள். ஆகவே, தன்னுடைய பாடுகளனைத்தையும் ஒன்றுவிடாமல்

14 அம்ருதா - ஜூன் 2019



அம்ருதா - ஜூன் 2019 15

*கதைவெளியும் கதை நிகழும் காலமும்.*

*பார்வதி ஓமக்குட்டன்: ஆசியா என்றால் தனியே இந்தியாவையும் இலங்கையையும் நினைத்து விட்டீர்களா? சைபீரியாவும் வடக்கு ஆசியாதான். ஆனால், அந்த நிலப்பரப்புக்கு உரிய பெண்கள் இந்திய பெண்களைப் போன்றோ அல்லது இலங்கைப் பெண்களைப் போன்றோ கட்டுப் பெட்டித் தனமானவர்கள் அல்ல. அவர்களும் ஐரோப்பிய பண்பாண்டுக் கூறுகளை கடை பிடிக்கும் பெண்களே.*

*நான்: அதனால்தான் ஐரோப்பியர்கள் என்று சொல்கிறேன். அது ஒருவகை மன அமைப்பு. இரண்டு ஆண்டுகள் போலந்தில் இருந்தபோது நேரில் பார்த்து உணர்ந்திருக்கிறேன்.*

*பார்வதி ஓமக்குட்டன்: அத்தோடு இன்னோர் விஷயம், ஐரோப்பா ஆசியா என்பது நிலப்பரப்பு சார்ந்த விடயம். மன அமைப்பு சார்ந்த விடயம் கிடையாது.*

*நான்: கீழ்த்திசை மனம் - மேற்கத்திய மனம் என்றுதான் எதிர்நிலை உருவாக்கப்படுகிறது. இந்தியாவிலிருந்து அமெரிக்காவிலும் அரபு நாடுகளிலும் குடியேறியவர்கள் நிலப்பரப்பிற்கேற்ப மாறிவிடுவதில்லை. மன அமைப்பில் தமிழர்களாக - குஜராத்திகளாக - மலையாளிகளாகவே இருக்கிறார்கள்.*

*சோஃபியா பெத்ரோவிச்சைப் பிரிந்தபின்னும் அழும் காரணம் ஒருவிதக் குற்றவுணர்வு. கத்தோலிக்கக் கிறித்தவச் சமயத்தால் உருவாகும் தன்னிலை அது.*

*கருணாகரன் சிவராசா: //சோஃபியா பெத்ரோவிச்சைப் பிரிந்தபின்னும் அழும் காரணம் ஒருவிதக் குற்றவுணர்வு. கத்தோலிக்கக் கிறித்தவச் சமயத்தால் உருவாகும் தன்னிலை அது// மிகச் சரியானதே.*

பார்வதி ஓமக்குட்டன் என்பவரோடு நடந்த உரையாடல் சாதனாவின் கதை எழுப்பும் விவாதப் பொருளைத் தொட்டிருக்கிறது என்றே நினைக்கிறேன். குற்றம் அதற்கான தண்டனை அல்லது மன்னிப்பு என்பது கிறித்தவ நம்பிக்கைக்குள்ளும் வேறுபாடுகளுடன் செயல்பாடுகிறது. மறுமலர்ச்சிக் கிறித்தவமும் ரோமன் கத்தோலிக்கக் கிறித்தவமும்கூட ஒன்றுபோல் இக்கருத்துநிலைகளை உள்வாங்கி மன அமைப்பை உருவாக்கிக் கொள்வதில்லை. பெத்ரோவிச்சிற்குள் இருக்கும் இரக்கத்தைப் போலவே சோபியாவின் மனதிற்குள்ளும் இரக்கம் இருக்கிறது என்றாலும் பொறுப்பற்ற கணவனை - குடிகாரகாரனாகவும் அசடனாகவும் இருக்கும் கணவனை மன்னிக்கும் அளவுக்கு அது இல்லை என்பது நடப்பு. அதே நேரத்தில் மன்னிக்க முடியவில்லை என்ற குற்றவுணர்வினால் எழும் அழுத்தம் உருவாக்கும் அழுகை என முழுமையாக சோபியாவின் பாத்திரத்தை ஐரோப்பியக் கத்தோலிக்கப் பாத்திரமாகவே ஆக்கியிருக்கிறார் சாதனா.

இப்பாத்திரத்தை அப்படியே தூக்கி இந்தியாவிலோ இலங்கையிலோ நடும்போது இப்படி எழுதிவிட முடியாது. ஐரோப்பியக் கத்தோலிக்கர்கள் மன அமைப்புபோலவே இந்தியா உள்பட்ட - கீழ்த்திசை நாட்டுக் கிறித்தவர்களின் மன அமைப்பு உருவாவதில்லை. கீழ்த்திசைத் தேசங்களின் கிறித்தவர்களிடம் ஒருவித சரணாகதி நிலை அல்லது இறையிடம் பொறுப்பை விட்டுவிட்டுத் தவிக்கும் தன்னிலைகளாகவே இருக்கின்றனர். குற்றத்திற்குத் தண்டனையை ஏற்கத் தயாராகும் மனநிலைகள், மன்னிப்புக்காக ஏங்குவதில்லை. இந்த அடிப்படையையும் உள்வாங்கியே அந்தக் கதையை தமிழில் எழுதப்பெற்ற ஐரோப்பியக் கதை எனச் சொன்னேன்.

சாதனாவின் கதைத் தொடக்கமும் முடிவும் சிறுகதையின் கூற்றுமுறையோடு இருந்தாலும் இடையில் வரும் காட்சிகளின் வர்ணிப்பும் உரையாடலும் முழுமையாக நாடகப் பனுவலின் காட்சி விவரிப்புக்கான நடையையும் உரையாடலில் ஒருவித மொழிபெயர்ப்புத் தன்மையையும் கொண்டிருக்கிறது. கதைக்குள் இருக்கும் உரையாடல் ஒன்றையும் விவரிப்பு ஒன்றையும் சுட்டிக்காட்டலாம்:

> *“மன்னித்துவிடுங்கள்... திரு. பவுல்விச் நகோவ், தாமதமாக வரவேண்டுமென நான் ஒருநாளும் விரும்பியதில்லை. ஆனால், என்னுடைய புறச்சூழல் சொல்லிக்கொள்ளும்படியில்லை. அதுவே என் இன்றைய தாமதத்துக்கும் காரணம்”*

இது உரையாடல். கீழே விவரிப்பு:

*ஆனால், சோஃபியா கூறியதை பவுல்விச்*

*செவிமடுத்தானில்லை. அவன், தன்னுடைய கைகளிலிருந்த நாடகம் எழுதப்பட்டிருந்த பிரதிகளைச் செப்பனிடுவதிலேயே குறியாக இருந்தான். அப்படிச் செப்பனிடும்போது அவன் உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. அவன் ஏதோ கோபத்திலிருக்கிறான் என்பதை சோஃபியா உணர்ந்துகொண்டாள்.*

இவற்றை வாசிக்கும் ஒருவர் கதையை வாசித்துக் கொண்டிருக்கும்போதே நாடகப் பனுவலொன்றை வாசிக்கும் மனநிலைக்குத் தாவிவிட்டுத் திரும்பவும் கதைக்குள் வரவேண்டியுள்ளது. அத்தோடு மொழிபெயர்ப்புத் தன்மைகொண்ட மொழியை வாசிப்பதாகவும் உணரத் தோன்றும். இவ்வாறான உத்திகளைச் சிறுகதை எழுத்தில் பின்பற்றக்கூடாது என்பதல்ல. ஒரு நவீனத்துவச் சிறுகதை அதற்குள் உருவாக்கப்படும் நிகழ்வுகளோடும் பாத்திரங்களோடும் ஒன்றிணையவும் விலகவும் செய்வதை முதன்மை நோக்கமாகக் கொள்ளும்போது இத்தகைய உத்திகள் சோதனை முயற்சிகளாகிவிடும் வாய்ப்பை உருவாக்கிக் கொள்கின்றன. சோதனை முயற்சிகளை வரவேற்பது அடுத்த கட்ட நகர்வுக்கு வழிவகுக்கும்.

சோதனை வடிவத்தை வரவேற்கும் அதே நேரத்தில் இக்கதாசிரியர் பயன்படுத்தும் மொழியும் தொடர் அமைப்புகளும் தேவையற்ற ஐயங்களையும் பொருள்கொள்ளலில் சிக்கலையும் ஏற்படுத்துவனவாக உள்ளன என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டியுள்ளது. கதையை எழுதியவரோ அல்லது அச்சில் பதிப்பிக்கும் இதழின் ஆசிரியரோ அம்மொழிப் பயன்பாட்டைக் களைந்திருக்க வேண்டும் என்றே நினைக்கிறேன்.

கதையை விவரிக்கும் கதை சொல்லியின் விவரிப்பிலும் பாத்திரங்களின் உரையாடலிலும் நேர்கூற்றில் சொல்ல வேண்டியவற்றைத் தொடர்ச்சியாக அயற்கூற்றுச் சொற்றொடரில் பயன்படும் இடைநிலை ஒட்டுகளால் எழுதியிருப்பது 'ஏனென்று தெரியவில்லை. மேலே காட்டிய விவரிப்புப் பகுதியிலேயே 'செவிமடுத்தானில்லை' என்று எழுதியுள்ளார். இதனைச் செவிமடுக்கவில்லை என்று எழுதாமல், செவிமடுத்தானில்லை என்று எழுதுவதின் தேவையென்ன என்று தெரியவில்லை. நேர்க்கூற்றை, அயற்கூற்றுத் தொனியில் சொல்லும் இத்தகைய மொழிப் பயன்பாடு கதை முழுக்கப் பல வரிகளில் இருக்கின்றன.

*கதையின்படிக்கு / கவுணொன்றையும் / அங்கி ஒன்றையும் / இரக்கம் கொள்பவளான / நுழைந்தவனான / இரவுபோல்தான் திரும்புவேன்.*

இந்தச் சொல்லாட்சிகளை கதையின்படி / கவுனையும் / அங்கியையும் / இரக்கம் கொண்ட / நுழைந்தவன் / இரவுதான் திரும்புவேன் என எழுதுவதால் எதுவும் ஆகிவிடப்போவதில்லை. அப்படி எழுதுவதே தமிழ்ச் சொற்றொடர் அமைப்புங்கூட. அதற்குப் பதிலாக பின்னொட்டு, இடைநிலை, அசைச்சொல் போன்றவற்றைச் சேர்ப்பதின் காரணங்கள் என்னவென்று புரியவில்லை. இதுபோன்ற சொல்லாட்சி கதை முழுக்கப் பல இடங்களில் இடம்பெற்றுள்ளன. அதைப் பட்டியலிடுவது நோக்கமல்ல. இதனைத் தனது தனித்த மொழிநடையாகக் கதாசிரியர் நினைக்கிறார் என்றால் வாசிப்புக் குழப்பங்கள் உண்டாக வேண்டும் என்று நினைக்கிறார் என்பதாகவே கருதவேண்டும்.

இதல்லாமல், இன்னொரு இடத்தில் இப்படியொரு சொற்றொடரை எழுதுகிறார்:

*'சூக்கா பில்லியர்ட்ஸ்' என்கிற வசைச் சொல்லொன்றினைச் சொல்லிக்கொள்வாள்.*

இதில் சூக்கா பில்லியர்ட்ஸ் என்பது வசைச்சொல் என்பது புரிகிறது. அது எந்த மொழியின் வசைச்சொல்; என்னவகையான வசைச்சொல்; அதனால் யாருக்குக் கோபமோ, வருத்தமோ உண்டாகும் போன்ற கேள்விகளுக்குப் பதில் இல்லை. வாசிக்கும்போது வாசிப்பவர்களுக்கு எழும் சந்தேகத்தை அடுத்துவரும் சொற்றொடர் தீர்த்துவைக்கவேண்டும். ஆனால், இங்கே வசைச் சொல் என்று சொன்னதோடு நகர்ந்துவிடுகிறார். இன்னோடரித்தில்,

*இத்தனை ஆண்டுகளாகியும் தனக்கோ பிள்ளைகளுக்கோ அடித்ததில்லை என்பதை நினைக்கும்போது அவளுக்கு வியப்பாகவுமிருந்தது.*

இத்தொடர் 'தன்னையோ பிள்ளைகளையோ அடித்தில்லை' என்று திருத்தம் செய்யப்பட வேண்டிய தொடர். இவைபோலவே திருத்தம் செய்யப்படவேண்டிய ஒன்றிரண்டைச் சுட்டிக்காட்டலாம்.

*அறைக்குள் உள்ளிட்டான். வெய்யிலும் சந்தையில் கூட்டமுமிருந்தது*

சுட்டிக் காட்டப்பட்டவைகள் எல்லாம் சொல் பயன்பாடு சார்ந்தவையே. எழுத்துப் பிழைகளும் ஒற்றுப்போடாத இடங்களுமெனப் பல இடங்கள் இருக்கின்றன. இதையெல்லாம் சிறுகதை எழுத்தாளர்கள் கவனிக்க வேண்டாதவை என நினைக்கிறார்கள் நமது எழுத்தாளர்கள். அவர்களின் விருப்பங்கள், கதை எழுப்பும் வாழ்க்கை சார்ந்த கேள்விகளை மட்டுமே விவாதிக்க வேண்டும் என்பதாகவே இருக்கிறது. இந்தப் போக்கு வரவேற்கத்தக்க போக்கு அல்ல.

### குறிப்பு 2

மொழிக்கல்வி, கல்விமொழி, தாய்மொழி, தேசமொழி, தொடர்புமொழி என்ற சொல்லாடல்கள் திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டிருக்கும் சூழலில் இவற்றில் எதன்மீதும் பற்றுக்கொள்ளாமல் நகரும் ஒரு கட்டுரை - மொழிகளைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டும் ஒரு கட்டுரை 'அம்ருதா' இதழின் அட்டைப்படக் கட்டுரையாக வந்துள்ளது. சுமதி ராமசுவாமி எழுதிய - PASSIONS OF THE TONGUE - என்ற நூலின் முன்னுரையை பூ.கொ. சரவணன் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். அவர் சுமதி ராமசுவாமியின் நூலையும் மொழிபெயர்த்து வெளியிடலாம். பயன்படும் ஒன்றாக இருக்கும். ●

**அ. ராமசாமி <ramasamytamil@gmail.com>**

# பனிக்குள் காலை வைத்தால் நந்தலாலா

**ப. தெய்வீகன்**

சாதனாவின் 'சோபியா அப்போதும் ஏன் அழுதாள்' சிறுகதை மெல்லுணர்வுகளின் மீது அவர் தொடர்ச்சியாக கட்டமைத்து வருகின்ற கதைகளின் இன்னொரு சான்றாக அமைந்திருக்கிறது.

மனித உறவுகளில் காண்பிக்கப்படுகின்ற அதீத விருப்பு - வெறுப்பு போன்ற உணர்வுகள் எதுவும் எப்போதும் முழுமையாக உமிழ்ந்துவிடப்படுவதில்லை. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நிலை சார்ந்து தமக்குள் வகுத்துக்கொள்கின்ற சமரச சட்டங்களின் வழியாகவே தமது நிலைப்பாடுகளை மீளமைத்துக்கொள்கிறார்கள். உணர்வுகளை வெளிப்படுத்துவதில் முன்முடிவுகளுடன்கூடிய விகிதாசாரங்களை பின்பற்றுகிறார்கள். டொனல்ட் ட்ரம்ப் மீதான விருப்பத்தை நாங்கள் வெளிப்படுத்தமுடியாத வண்ணம் எங்களை தகவமைத்துக்கொள்வதற்கும் இளையராஜா மீதான வெறுப்பை வெளிக்காட்ட முடியாமல் எங்களை கட்டுப்படுத்திவைப்பதற்கும் நாங்கள் ஒவ்வொரு நியாயங்களை எமக்குள் வகுத்துக்கொள்கிறோம். சாதனாவின் கதையிலும் சோபியாவுக்கு அவள் கணவன் மீது வெறுப்புக்கொள்வதற்கு அவளளவில் போதிய காரணங்கள் கை நிறையக் கிடக்கின்றன. ஒரு கலவியின் பின்னர் அவனை பிரிந்துசெல்லக்கூறுமளவுக்கு அவளுக்குள் ஆத்திரமிருக்கிறது.

ஈற்றில் அவனை பிரிந்து மகிழ்ச்சியாக நாடகங்களில் திளைக்கிறாள். பிரிவுக்கு அவள் வகுத்துக்கொண்ட காரணங்களின் பிரகாரம் வாழ்க்கை நன்றாகத்தான் நகர்கிறது. ஆனால், அவளால் முற்றுமுழுதாக வெறுக்கமுடியாத கணவன் மீதான காதலை அவளுக்குள் காலம் தொடர்ந்தும் இனங்காட்டியபடியே உள்ளது. கதையின் கடைசியில் அவளிலிருந்து கழன்றுவிழுகின்ற அந்த கண்ணீர்துளி கதையின் ஒட்டுமொத்த உயிரோட்டமாகவும் அமைந்துவிடுகிறது.

சாதனாவின் எல்லா கதைகளையும்போல இதுவும்கூட 'பனிக்குள் காலை வைத்தால் நந்தலாலா' என்று எங்கோவொரு அந்நிய தேசத்தில் நகர்கிறது. கீபோர்ட்டில் தேடி தேடி அழுத்தவேண்டிய சொற்களாலான பாத்திரப் பெயர்கள்தான் அவரது இந்தக் கதைக்கும்கூட தேவையாக உள்ளது. இந்தவகையான உத்தி சாதானாவின் எல்லா கதைகளிலும் தொடருவது



சிறுகதை

## சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்?

சாதனா
ஓவியம்: Oswaldo Guayasamín

குரோசியாவாக வேடமிட்டிருந்த சோஃபியாவின் கண்களுக்குக் கீழாகச் சற்றுக் கறுத்திருந்தது. அதை மறைப்பதற்காக பவுடரை ஒற்றி ஒற்றி எடுத்தாள். கூர்ந்து கவனித்தபோது அப்போதும் கருமை தெரிவதாகவே அவளுக்குப் பட்டது. பாதங்களினால் தன்னைத்தானே எழுப்பி கண்ணாடிக்கு அருகாக முகத்தைக் கொடுத்தவள், விரல்களினால் கண்களுக்குக் கீழாக வருடினாள்.

அவளுக்கு அழுகை வந்தது. மேசையில் கைகளை ஊன்றிக்கொண்டு அழத்தொடங்கினாள். பின், சட்டென்று அழுகையை நிறுத்திக்கொண்டவள், நிமிர்ந்து கண்ணாடியைப் பார்த்தாள். அவள் அழுத அழுகையின் கண்ணீரானது அவள் முகத்தில் போடப்பட்டிருந்த ஒப்பனையை சற்றுக் கலைத்திருந்தது. கைகளினால் தேய்த்து ஒப்பனையைச் சரி செய்தவள், தன்னைத் தானே மேலிருந்து கீழாகப் பார்த்துக்கொண்டாள். தான் அணிந்திருந்த அந்த நீண்ட வெள்ளை நிறப் பாவாடை சற்று தூக்கியிருப்பது போல் தோன்றவே அதைக் கைகளால் தேய்த்து எடுத்தாள். அப்போதும் தூக்கிக் கொண்டுதான் இருந்தது.

சுவரில் பொருத்தப்பட்டிருந்த கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தாள். இன்னும் இரண்டு நிமிடங்கள்தான் இருக்கிறது. சற்றுத் தாமதித்தாலும் படுகேவலமான தூசண வார்த்தைகளால் பவுல்விச் திட்டுவான். அவனுக்கு எல்லாம் நேர்த்தியாகவும் நேர ஒழுங்கோடும் இருக்க வேண்டும்.

ஒரு பரபரப்போடு அந்த மிகச்சிறிய ஒப்பனை அறையைவிட்டு வெளியேற நினைத்தவள், என்ன நினைத்தாளோ... மறுபடியும் வேகமாய் ஓடி வந்து, கண்ணாடிக்கு முன் நின்றுகொண்டு தன்னை முழுவதுமாய் பார்த்தாள். திருப்தியாய் படவே கணுக்கால் வரை நீண்டிருந்த பாவாடையை தன் இரண்டு கைகளினாலும் தூக்கிக்கொண்டு அந்த அறையைவிட்டு வெளியேறலானாள்.

வெளியே, சோஃபியாவைக் கண்டதும் பவுல்விச் சற்று முகம் மாறினான். "இப்போதுதான் வருகிறாயா; போன வாரமே நான் உனக்கு அறிவுறுத்தியிருந்தேன் அல்லவா?" என்றான்.

அவ்வளவுசீக்கிரம்பவுல்விச்சைசோஃபியா எதிர்பார்க்கவில்லை. தாமதத்திற்கு ஏதாவது காரணம் சொல்லித்தான் ஆகவேண்டும். இல்லையென்றால் விடமாட்டான். "மன்னித்துவிடுங்கள்... திரு. பவுல்விச் நகோவ், தாமதமாக வரவேண்டுமென நான் ஒருநாளும் விரும்பியதில்லை. ஆனால், என்னுடைய புறச்சூழல் சொல்லிக்கொள்ளும்படியில்லை. அதுவே என் இன்றைய தாமதத்துக்கும் காரணம்" என்றாள். சோஃபியா அவ்வாறு சொல்லும்போது அவள் கண்கள் பவுல்விச்சையே பார்த்துக்கொண்டிருந்தன.

ஆனால், சோஃபியா கூறியதை பவுல்விச் செவிமடுத்தானில்லை. அவன், தன்னுடைய கைகளிலிருந்த நாடகம் எழுதப்பட்டிருந்த பிரதிகளைச் செப்பனிடுவதிலேயே குறியாக இருந்தான். அப்படிச் செப்பனிடும்போது அவன் உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. அவன் ஏதோ கோபத்திலிருக்கிறான் என்பதை சோஃபியா உணர்ந்துகொண்டாள். தான் கூறிய காரணத்தை அவன் ஒருபோதும் நம்பப் போவதில்லை. நான் பொய் சொல்வதாகவே அவன் நினைப்பான். ஏற்கனவே கோபத்திலிருக்கும் அவன் இதனால் இன்னும் எரிச்சல்படக் கூடும். ஆகவே, இப்போதைக்கு இந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிடுவதுதான் சரியென்று அவளுக்குத் தோன்றிற்று.

பவுல்விச்சை விட்டு விலகி அப்பால் நடந்தாள். அப்படி விலகிச் செல்லும்போது பவுல்விச் தன்னை மறுபடியும் அழைத்துவிடுவானோ என அச்சமடைந்தாள். நல்லவேளையாக... பவுல்விச் அவளை மறுபடியும் அழைக்கவில்லை. ஆறுதலடைந்த சோஃபியா திரைச்சீலையை விலத்தி மேடையை அடைந்தாள்.

மூன்றாவது வாரமாகவும் 'குரோசியாவும் வேலைக்கார பெண்களும்' நாடகம் இன்று அரங்கேற்றப்படுகிறது. 'Croatie et femmes servantes' என்ற ஃபிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட நாடகத்தையே அவர்கள்ரஷ்யமொழியில்மொழிபெயர்த்திருந்தார்கள். கதையின்படிக்கு சோஃபியா எஜமானி. அதாவது குரோசியா. அக்லேயாவும்ஸென்னியும்குரோசியாவின் வேலைக்காரப் பெண்கள். சோஃபியாவை கண்டதும் அக்லேயாவும் ஸென்னியும் புன்னகைத்துக் கொண்டார்கள். அவர்கள் ஏற்கனவே தங்களை தயார்படுத்தியிருந்தார்கள். அவர்கள் இருவரும் வெள்ளைநிறத்திலான கவுணொன்றையும் அதை மூடினாற்போல் நீல நிறத்திலான அங்கி ஒன்றையும் காலுக்கு முழங்கால் வரை நீண்டிருந்த காலுறைகளையும் கருப்பு நிறச் சப்பாத்துக்களையும் அணிந்திருந்தார்கள். இருவரின் தலைகளிலும் வேலைக்காரிகள் அணியும் தொப்பி.

ஸென்னி அன்று மிதமிஞ்சிய அழகுடன் இருப்பதுபோல் சோஃபியாவுக்குப் படவே, அதை அவளிடம் கூறினாள். புன்னகைத்துக்கொண்டவளான ஸென்னி, "நன்றி" என்றாள். ஸென்னி சோஃபியாவின் நல்ல தோழிகளில் ஒருத்தி என்று சொல்லிவிட முடியாது. ஆனால், அக்லேயாவுடன் ஒப்பிடும்போது ஸென்னி நல்லவளென்று சோஃபியா நினைத்தாள். ஆகவே, தன்னுடைய பாடுகளனைத்தையும் ஒன்றுவிடாமல்

14 அம்ருதா - ஜூன் 2019

ஒருவித அயர்ச்சியை தருகிறது. கதையின் மீதான வசீகரிப்பை ஒட்டிவெப்பதற்காக சாதனா தொடர்ந்தும் ரொட்டித்துண்டை சாப்பிடுகின்ற கதாபாத்திரங்களாகவே உருவாக்கிக் கொண்டிருக்காமல், ஏனைய களங்களிலும் தனது கதைகளை நகர்த்தி வரவேண்டும். இந்தக் கதைகூட தமிழ் வாசகனுக்கு நெருக்கமானதொரு கதைக்களத்தில் சாதனாவினால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால் அவரால் அதிக சவால்களுடன் படைத்திருக்க முடியும்.

அந்நியமான கதைக்களத்தெரிவென்பது சாதனா தொடர்ந்தும் தன் கதை மீதான போலி வசீகரிப்பொன்றை ஏற்படுத்துவதற்காக கடைப்பிடிக்கும் தப்பிக்கும் பாதையாக (Escape Route) இருந்துவிடக்கூடாது.

சாதனா தெரிவு செய்யும் கதைக்கருக்கள் எப்போதும் அபாரமாக இருக்கின்றன. அவற்றை நேர்த்தியாக தனது கதைகளில் கொண்டுவருதற்கு மேற்கொள்ளும் அவரது முயற்சிகளும் வெற்றிகரமாக அமைகின்றன. ஆனால், அதற்கு அப்பால் அந்தக் கதைகளை இலக்கியமாக்குவதில் குழப்படைகிறாரோ என்ற சந்தேகம் அவரது கதைமொழிகளில் தெரிகிறது.

சமகாலத்தில் ஈழத்தின் மிகுந்த நம்பிக்கைக்குரிய கதைசொல்லிகளில் ஒருவராக வலம் வருகின்ற சாதனாவுக்கு வாழ்த்துக்கள். 'சோபியா அப்போதும் ஏன் அழுதாள்' அனைவரும் படிக்கவேண்டிய சிறுகதை. ●

*(ஃபேஸ்புக்கில்)*

# மண் குதிரை

**விஜய ராவணன்**

**ஓவியம்: அமுதன் ஜெயகொடி**

வெயில், வறட்சி என்ற இரட்டையர்களும் ஊரை மாறிமாறி மிரட்டி ஓய்ந்துவிட்டது. இப்போது காற்றின் முறை. தன் பிடிகயிறை அறுத்தெறிந்து, மிரண்டு ஓடிவரும் காளையைப் போல், பேய்க் காற்று சுழன்றடிக்கத் தொடங்கியது. அங்கொன்றும் இங்கொன்றுமாய் சிதறிக் கிடந்த வீட்டுக் கூரைகள் காற்றின் செம்மண் புழுதியில் குளித்தன. காற்றின் இரைச்சல் எங்கும் ஓலமாய் எதிரொலித்தது.

என்றாவது ஒருநாள் தண்ணீர் கிடைக்கும் என்ற பேராசையோடு நான்காம் வீட்டு வாசலில் இருந்த நெகிழிக் குடம், காற்றின் சீற்றத்தில் உதிர்ந்த சிறகாய் பறந்தது. பாதி இடிந்துபோன முனை வீட்டில் மேலும் ஒரு ஓடு கீழே விழுந்து உடைவதைப் பொருட்படுத்தாத நாய் ஒன்று, காற்றுக்குப் பயந்து இடிந்த சுவரை ஒட்டியே நகராமல் படுத்திருந்திருந்தது. மணலின் புழுதியில் அதன் வெள்ளை நிறம் செந்நிறமாவதைக் கவனிக்கத் தெருவில் யாருமில்லை.

காற்றில், வீசி எறியப்பட்ட வெள்ளை வேட்டி ஒன்று, ஊர்க்கோடியில் இருக்கும் ஆறடி அரிவாளில் கிழிந்து தொங்கியது. ஆனால், காற்றுக்கு இன்னும் திருப்தி வரவில்லை. ஓங்கி எழுந்த மண்சுழலில், வேட்டி அரிவாளின் பிடியிலிருந்து விடுபட்டு அய்யனார் முகத்தில் வந்து விழுந்தது. சேர வேண்டிய இடத்தில் வேட்டியைச் சேர்த்த திருப்தியில் படமெடுத்தாடிய காற்று நாகம் சீறியபடி கொஞ்சம் கொஞ்சமாய் அமைதியானது.



மறந்து போயிருந்த ஊர் வாசத்தை வேட்டி தாங்கி வந்ததில் இந்தப் பெரிய மீசைக்காரருக்கு சந்தோசம்தான். மீண்டும் ஒரு முறை தன் முகத்தின் மீது கிடக்கும் செம்மண் படிந்த கிழிந்த வேட்டியை சாமி நுகர்ந்து பார்த்தது. சத்தியமாக, இதே ஊர்க்காரனோடதுதான் என்று அடித்துச் சொன்னது, வேட்டியின் மண்வாசம். அப்படியென்றால் இன்னும் ஊரில் மனிதத் தலைகள் மிச்சமிருக்கத்தான் செய்கின்றன!

சாமிக்கு சந்தோசத்தில் தன் பீடத்திலிருந்து இறங்கி ஆட வேண்டுமென ஆசை. ஆனால், எழுந்தாட கால்களில் சக்தியில்லை. அந்த ஆட்டத்தைத் தாங்கவும் வெடிப்பு விழுந்த பூமிக்கும் தெம்பில்லை. ஊருக்கு வரும் புது ஆட்களை மண் குதிரையில் விரட்டிச் சென்று யார் என்று விசாரிக்கும் சோலியெல்லாம் இப்போது அய்யனாரிக்கில்லை. பசியும் தாகமும் கைகோர்த்துத் திரியும் ஊருக்கு வெளியாள் யார் வரப்போகிறார்கள்?

இந்தக் கிராமத்தையும் சேர்த்து, சுற்று வட்டார ஊர்களுக்கெல்லாம் உயிர்நாடியாய் ஓடிக்கொண்டிருந்த ஆற்றங்கரைப் படலெங்கும், மணல் வாரி வாரி அள்ளப்பட்ட தடங்கள் விழுப்புண்களாய் படர்ந்திருந்தது. ஆற்று மணலும் நீரும் ஒருசேர வற்றி எங்கும் வறட்சி. நிலத்தின் வெடிப்பு சுற்றியிருக்கும் கோயில் தூண்களில் கீறலாய்க் கிளை விட்டிருந்தன. காற்று கடந்த பின்னும் அந்தத் தூண்களில் கட்டியிருக்கும் மணிகள் லேசாய் சப்தமெழுப்பின.

சமீபகாலமாய்த் தனியாய் விடப்பட்ட சாமிக்கு ஊரிலிருந்து சேதி கொண்டுவருவதும் பேச்சுத் துணைக்கிருப்பதும் இந்த வெக்கைக் காற்று மட்டும்தான்!

ஊர் கொடைக்கு இரண்டு நாட்கள் முன், மணல் அள்ளும் ஒப்பந்தம் சம்பந்தமாக இரட்டைக் கொலைகள் நடந்த வருடம்தான் முதல்முறை கோயில்கொடை நடக்காமல் தடைப்பட்டது. மறுநாள் இடுகாட்டில் மனித மாமிசம் உண்ட திருப்தியில், நெருப்பு சாம்பல் புகையாய் ஏப்பம் விட்டுக் கொண்டிருந்ததை, தூரத்தில் அமர்ந்தபடியே அன்று இரவு முழுவதும் சாமி வெறித்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தது.

இடுகாட்டுச் சாம்பலை காற்று ஊர் முகத்தில் வாரி இரைத்துக் கொண்டிருந்த நடுஜாமத்தில், ஊருக்குள் வந்த கோடங்கி, 'இது ஒரு கெட்ட சகுனம்!' என்றான். அன்றுதான் முதல்முறை அவன் ஊருக்கு வந்திருந்தான். நள்ளிரவின் கறுப்புத் திரையைக் கீறிக் கிழித்தபடி பிரகாசமாய் வெளிப்பட்டது, அவனது நெற்றிக் குங்குமப் பொட்டு.

"வறட்சியும் பசியும் இனி தலைவிரித்து ஆடப் போகிறது! வரும் காலங்கள் மழையற்று போகும்" என்று உசத்த குரலில் சொல்லிவிட்டு இருட்டோடு இருட்டாய் மறைந்துபோனான். "மீண்டும் ஒருநாள் வருவேன்! அதுதான் இந்த ஊருக்கு நான் வரும் கடைசி முறையாய் இருக்கும்!!" என்று சொன்ன அவனது வார்த்தைகளும் உடுக்கையின் சப்தமும் அவன் போன பின்பும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. வீட்டு வாசல் கயிற்றுக் கட்டில்களில் கிடந்த பலரது தூக்கம் அன்றைய இரவுக்குப் பின் தொலைந்தது. அன்றைய இரவு விடியாமல் நீண்டுகொண்டே போனது.

கோடங்கி சொன்னதைப் போல் அடுத்த சில மாதங்களில் நிலத்தடி நீரும் நாக்கின் எச்சிலும் ஒருசேர வற்றிப் போயின. நீரற்ற ஊர் கிணறு

**இள ஆட்டுக்கறி விரும்பி சாப்பிடும் அய்யனாருக்கு அன்று வாழை இலை விரித்து பருப்புச் சோறு பரிமாறினாள், மூக்காயி. பீடத்திலிருந்து சாமி எழுந்து வருவதற்கு முன், கட்டெறும்புகள் சாரைச் சாரையாய் ஆளுக்கொரு பருக்கையைத் திருட்டுத் தனமாய்த் தூக்கிச் சென்றன.**

குப்பைக் கிடங்கானது. வெடிப்பு நிலத்தின் அடியில் ஊர்ந்தபடியே பக்கத்து ஊர்களுக்கும் பரவியது. சுற்றுவட்டாரம் எங்கும் தண்ணீரில்லை. மேகங்கள், சபிக்கப்பட்ட ஊர் எல்லைளைத் தாவி குதித்துக் கடந்தன.

ஆடுகள் மேய பச்சிளம் புற்கள் இல்லை. நிலத்தடி நீரைத் தேடி அலைந்த உலர் தேங்காய்களின் குடுமி எதுவும் செங்குத்தாய் நின்றபாடில்லை. தன்னைச் சுற்றியிருந்த பெண்களையும் அவர்கள் கையிலிருக்கும் வண்ண வண்ண நெகிழிக் குடங்களையும் காணாது, தெருக்குழாய்கள் துருப்பிடிக்கத் தொடங்கின.

புதர் மண்டிக் கிடக்கும் குளத்தை சுத்தம் செய்து தூர்வாருவது என்று காலம் தாழ்த்தி முடிவெடுக்கப்பட்டது. எதற்கு என்று கேட்டால், என்றாவது ஒருநாள் மழை பெய்யும் என்றனர் நம்பிக்கையோடு, திறந்த வானத்தைப் பார்த்தபடி. தன் இருப்பிடத்துக்கு ஆபத்து வந்ததாய் பதறிய கருநாகம் ஒன்று கடித்ததில் மாரியப்பன் இறந்து போனான். இதுதான் அந்த வருடத்தின் முதல் சாவு. அதன்பின் யாரும் எதிர்பாராத நேரத்தில் சாவு பல மாறுவேடங்களில் அடிக்கடி ஊருக்குள் வந்து போனதுண்டு. ஆனால், அவர்கள் எதிர்பார்க்கும் மழை மட்டும் வந்தபாடில்லை.

பிறகு, நீரின் மெல்லிய கோட்டினால் தடம் பதித்தபடியே மாதம் ஒரு முறை எட்டிப் பார்க்கும் தண்ணீர் டாங்கிகளும், அரை வயிறு கால் வயிறு என்று குறைக்குடமாய் வரத்தொடங்கி மேகங்களைப் போல் காணாமலே போனது. தண்ணீர் டாங்கிகள் வந்த சமயங்களில் ஊர் எல்லையிலிருந்தே காலி குடங்களும் குவிந்த கைகளும் கூட்டமாய் விரட்டும். வடியும் தண்ணீரில் அவர்களது காய்ந்த முகம் ஈரப்பசையடையும். அன்று ஒருநாள் மட்டும் வயிறு வெடிக்கும் அளவு தண்ணீர் குடிப்பர், இரத்தத்துக்கு பதிலாக உடலெங்கும் தண்ணீர் ஓடும்! மீண்டும் மறுநாளிலிருந்து தண்ணீர்க் குடங்கள் நகைப் பெட்டியைப் போல் பத்திரப்படுத்தப்படும்.

தண்ணீர்க் குடங்கள் இப்போது சாலை மறியலுக்கு மட்டுமே பயன்படுகின்றன. அவற்றின் திறந்த வாயில் செம்மணல் நிரம்பிக் கிடக்கிறது. சுற்றுவட்டார ஊர்களின் தவித்த நாக்குளைத் தாண்டி தண்ணீர் டாங்கிகள் இந்த ஊருக்கு முழுசாய் வரவேண்டும் என்ற நினைப்புகூடப் பேராசைதான்!

பசி தீராத குழந்தையின், நிற்காத அழுகைத் தாளாமல், தன் வற்றிய மார்பை பார்த்துச் சப்தமின்றி அழுதபடியே, மருந்து குடித்து இறந்து போனாள், பேச்சி. அன்று இரவு முழுவதும் அம்மையின் காம்பைத் தேடும் பசித்த குழந்தையின் அழுகை, ஊர் கோடியிலிருக்கும் சாமி காது வரை நிற்காமல் எதிரொலித்தது. அம்மையை இழந்த தன் பிள்ளையோடு நாச்சியப்பன் ஊரைவிட்டே போனான்.

நாட்கள் காத்திருப்பில் காய்ந்த இலைகளாய் உதிர்ந்து கொண்டிருந்தன. மனிதனுக்கே சாப்பிட உணவில்லை, குடிக்கத் தண்ணீரில்லை என்றானபின் சாமிக்கு எதுக்குப் படையல்? தன் வேதனை சாமிக்கும் தெரியட்டும் என்று அந்த வருடமும் கோயில் கொடை நடத்தப்படவில்லை. காலியாகிக் கொண்டிருக்கும் ஊருக்கு எதுக்கு கொடை என்ற கேள்விக்குறி அய்யனார் கையிலிருக்கும் அரிவாளைவிட உசரமாய் வளர்ந்து நின்றது.

மேகம் சபித்த ஊரை விட்டுக் காலி செய்து போகும் தலைகளை எண்ணுவது மட்டுமே சாமியின் வேலையாகிப் போனது. அப்படி ஊரை விட்டு போகுபவர்களும் தன்னிடம் ஒரு வார்த்தைகூட சொல்லிவிட்டுப் போவதில்லை என்ற வருத்தம் அய்யனாருக்கும் உண்டு. சொன்னால் மட்டும் என்ன ஆகப்போகிறது? அவர்களைப் போகாமல் தடுக்கத் தன்னிடம் எந்த காரணமும் இல்லை என்பது சாமிக்கும் தெரியும்.

பெருஞ்சப்தம் எழுப்பியபடியே உஷ்ணக் காற்று சில சமயம் சாமியின் மண் குதிரைகளை மிரளவைக்கும். பாதை மறைக்கும் காற்றுப் புழுதியில் மிரண்டு ஓடும் குதிரைகளைப் பிடிக்கக்கூட இப்போதெல்லாம் சாமி எழுந்திருப்பதில்லை. சாமிக்குத் தெரியும் தண்ணீர் இல்லாத ஊரில் அதுகளால் தாகம் தவிக்க ரொம்ப தூரம் ஓடிவிட முடியாதென்று.

கோயிலைக் கூட்ட வரும் மூக்காயியின் பேச்சுத் துணையும் ஒருநாள் சாமிக்கு இல்லாமல் ஆனது. கோயிலுக்கென்று நேர்ந்துவிட்ட குடும்பம். கோயிலைச் சுத்தம் செய்வதும் தனிமையிலிருக்கும் காவல் சாமியுடன் கதை பேசுவதும்தான் அவர்கள் வேலை. அந்தக் குடும்பத்தின் தலை பிள்ளைக்கு மூக்கன் என்று பெயர் வைப்பதுதான் வழக்கம். பெண்ணாக பிறந்ததால் மூக்காயி என்று பெயர் வைத்தார்கள். நாள் தவறாமல் கோயிலைச் சுத்தம் செய்ய வந்துவிடுவாள், மூக்காயி கிழவி.

ஒருநாள் நிலவு தெரியாத நடுஜாமத்தில் உயரம் வாரியாகக் கோயிலில் வளர்ந்து நிற்கும் அரிவாள்களில் ஒன்றான மூன்றடி அரிவாளை இரண்டு கைகள் உலுக்கின. மண்ணின் மீதுள்ள உரிமையில் வேரூன்றிருந்த அரிவாள் அசைய மறுக்கவும் நான்கு கைகள் சேர்த்து அசைத்தன. வெடிப்பு விழுந்த பூமி கொஞ்சம் விட்டுக் கொடுத்தது. ஆலமரம் போல் பெயர்ந்துவிழுந்த அரிவாளை இருட்டின்போர்வையில் கோணித் துணியில் சுருட்டினர். தன் அரிவாளைத் திருடும் அசலூர்காரர்களை சாமி சிவந்த கண்களோடு உற்றுப் பார்த்தது. குழிபோல் புதைந்துக் கிடக்கும் அவர்களது ஒட்டிய வயிற்றைப் பார்த்ததும், பஞ்சம் பிழைக்க தன் அரிவாளைத் திருடும் இவர்களாவது பிழைத்துப் போகட்டும் என ஓங்கிய அரிவாளைத் தாழ்த்திக் கண் மூடிக்கொண்டது.



“கோயிலிலேயே களவாண்டுருக்கானோ. எம்புட்டு தைரியம் அவனோக்கு. சாமி கல்லாயிட்டுலே.” ஊருக்குள் பரவும் பேச்சை மூக்காயியால் கேட்க முடியவில்லை. வாரம் ஒருநாள் மட்டுமே நெல்சோறு என்றாகிப் போன வாழ்க்கையில் அந்த வாரத்திற்கான பங்காய், தனக்கென்று எடுத்து வைத்திருந்த ஒரு ஆழாக்கு அரிசியை அடுப்பில் இட்டுப் பொங்கினாள். கவுச்சிக்கு வீட்டில் எதுவும் இல்லை. அன்று பருப்பும் கால் தூக்குச்சட்டி சுடுசோறும்தான் சாமிக்கு,படையல். சாமியின் பலநாட்கள் பசியைத் தீர்க்கப் போகும் சந்தோசம் அவள் பொக்கைவாயில் பிரதிபலித்தது.

பாதி நிறைந்த தூக்குச்சட்டி, போகும் வழியில் காற்றில் எழுப்பிய சப்தத்தில் அதிகாலையிலேயே ஊர் விழித்துக் கொண்டது. பருப்புச் சோறு எல்லோருடைய நாசிக்கும் பசியை நினைவுபடுத்தவும், படுக்கையை விட்டு எழுந்த உடல்கள் மீண்டும் இருகைளால் அடிவயிற்றைப் பிடித்தபடியே கால்கள் இரண்டையும் ஒட்டிப் போன வயிற்றோடு மடக்கி, பாம்பைப் போல் படுக்கையில் மீண்டும் சுருண்டு கொண்டன.

காலைநேர வெயிலின் கீற்றில் மூக்காயி கையில் இருந்த தூக்குச் சட்டியின் பளபளப்பு, புதர் மண்டிய பாதையில் தூரத்தில் இருந்தே தெரிந்ததும் சாமியின் ஒட்டிய வயிற்றில் சுருண்டிருந்த பசி மீண்டும் தலைத் தூக்கியது. மண் குதிரைகள் கனைக்கத் தொடங்கின.

இள ஆட்டுக்கறி விரும்பி சாப்பிடும் அய்யனாருக்கு அன்று வாழை இலை விரித்து பருப்புச் சோறு பரிமாறினாள், மூக்காயி. பீடத்திலிருந்து சாமி எழுந்து வருவதற்கு முன், கட்டெறும்புகள் சாரைச் சாரையாய் ஆளுக்கொரு பருக்கையைத் திருட்டுத் தனமாய்த் தூக்கிச் சென்றன.

தன் மூன்று வருடப் பசியைச் சில சோற்றுண்டைகளிலேயே விரட்டியடிப்பது என்ற முடிவில் சோற்றை அள்ளி அள்ளி வாயில் திணிக்க, அதன் ஒன்றிரண்டு பருக்கைகள் மீசையில் ஒட்டி யிருப்பதைக்கூட சாமி பொருட்படுத்தவில்லை. பாவம், அதுக்கும் பசித்திருக்கும் என்று விட்டுவிட்டது. நிமிடப் பொழுதில் சாப்பிட்டு முடித்த வேகத்தில் விக்கல் எழுந்தபோதுதான் சாமிக்கு நினைவு வந்தது, இது தண்ணீர் இல்லாத பூமி என்று. சாமியின் விக்கல் சப்தத்தைக் கேட்டு இடி இடிக்கிறது என்று நம்பி அண்ணாந்து பார்த்த பறவைக் கூட்டங்கள் ஏமாந்து போயின.

நாட்கணக்காய் பட்டினி கிடந்த சாமிக்குச் சோறிட்ட திருப்தியில், நிறைந்த மனதோடு கயிற்றுக் கட்டிலில் படுத்தவள், தூர விழும் நட்சத்திரத்தை கவனிக்காமலேயே, ஒட்டிய வயிறோடு விரிந்த கண்களோடு அன்றிரவு இறந்துபோனாள். அனாதையான சாமியின் விக்கல் சப்தம் மட்டும் அதன்பின்னரும் சில நாட்கள் இரவு முழுவதும் கேட்டுக்கொண்டிருந்தது.

மூக்கால்வாசி ஊர் காலியாகிவிட்ட பிறகான ஒருநாள். வானில் நட்சத்திரங்கள் வழக்கத்தைவிட நேர்த்தியாய் ஒளிபரப்பின. காற்றும் களைப்பில் அசந்து தூங்கிக் கொண்டிருந்தது. அவன் உடுக்கைச் சப்தத்தின் வீரியம் தாங்காமல் நாய்கள் குரைக்கத் தொடங்குவும், தூங்கிக் கொண்டிருந்த மிச்சமிருந்த சனங்கள் விழித்துக்கொண்டனர். அவன் வார்த்தைகள் வெறுச்சோடிய தெருவெங்கும் எதிரொலித்தது. ”இன்றிலிருந்து பத்தாவது நாள் மழை பெய்யும். அதுதான் இந்த ஊரில் பெய்ய இருக்கும் கடைசி மழை!!”

‘மழை’ என்ற வார்த்தையைக் கேட்டதும் போர்வைகள் விலகின. பூட்டிய கதவுகள் மடால் என்று திறந்தன. மரப்பொந்துகளிலும் சிதைந்த கிணற்றுப் படிகளிலும் பதுங்கியிருந்த சொற்பப் பறவைகள் ஒலி எழுப்பின. காய்ந்த மரங்களும் ஏதோ நம்பிக்கையில் லேசாய் தலையசைத்தன. அவன் காலடிச் சப்தம் ஓயும் திசையில் குரைக்க மறந்த தெருநாய்கள் வெறித்துப் பார்த்தபடியிருந்தன.

ஆனால், பெய்யப் போகும் கடைசி மழைக்கு காத்திருந்து என்ன பயன்? ஒற்றை மழை ஊரின் வாழ்க்கையை புரட்டிப் போட்டுவிடுமா? அந்தக் கடைசி மழையில் முழுசாய் நனைந்துவிட்டுத்தான் கிளம்பி போவது என சில ஆட்களும், எல்லாம் மாறிவிடும் என்ற நம்பிக்கையில் சொற்பத் தலைகளும் மட்டுமே ஊரில் எஞ்சியிருந்தனர்.

ஆள்நடமாட்டம் மிச்சமிருக்கும் வீடுகளிலிருந்த காலிக்குடங்களும் வாளிகளும் மழைக்குத் தயாரா யின. காவல்சாமி கோயிலில் பல நாட்களுக்குப் பின்



கேட்ட காலடிச் சப்தங்கள், தண்ணீர் தெளித்து கூட்டி மெழுக வைத்திருந்த இரண்டு குடங்களைத் தூக்கிச் சென்றது. தண்ணீரின் சுவைக்காக காத்திருந்த எச்சில் விழுங்கவும் மறந்து, நாட்காட்டியைப் பார்த்தபடியே பொழுதைக் கழித்தனர்.

கோடங்கி சொன்ன தினமும் வந்தது. வானம் கார் மேகங்களை ஆடையாய் உடுத்திருந்தது. காலி குடங்கள் தெருவில் ஒன்றுகூட, கருத்த மேகங்களைப் பார்த்த பறவைகள் கிளைகளில் சிறகடித்தபடியும், கால்நடைகள் திறந்த வெளியில் சப்தம் எழுப்பியபடியும் மழையில் நனையக் காத்திருந்தன.

வானம் இருண்டு, மேகங்கள் மழையைத் தாங்கி வந்தது. பெய்ய இருக்கும் கடைசி மழையில் தன் வாழ்நாளின் மொத்தத் தாகத்தையும் தீர்த்துக்கொள்ள, ஊர்கோடியில் அய்யனாரின் மண்குதிரைகள், ஈரம் வற்றிய நாக்கை வெளியே நீட்டியபடி அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தன.

திடிரென்று அழையா விருந்தாளியாய் வந்தது காற்று. தன் எல்லைக்குள் அனுமதியின்றி நுழையக் காத்திருந்த மேகங்களோடு மல்லுக்கட்டியது. காற்றின் மிரட்டலுக்குப் பயந்த மேகங்கள் சிதறி ஓடத் தொடங்கவும் நிலைகொள்ளாத பறவைகள் சப்தம் எழுப்பியபடியே வானில் பறந்தன. மழை ஏமாற்றியதை வறண்ட பூமியும், காய்ந்த தொண்டைக் குழிகளும் வெறும் பொம்மைகளாய் வேடிக்கைப் பார்த்து நின்றன. மழையை பிரசுவிக்காத வானத்தைப் பார்த்து வசைந்தனர். காலி குடங்களைத் தூக்கி எறிந்தனர். இனியும் இந்த ஊரில் இருந்து என்ன பயன்?

பெருசாய் மூட்டைக் கட்டிப் போக வீட்டில் ஒண்ணுமில்லை. மிச்சமிருந்த ஊரும் காலியாகத் தொடங்கியது. தெருவெங்கும் கானல்நீரைக் குடித்து வளர்ந்த கருவேல மரங்கள் ஆக்கிரமிக்கத் தொடங்கின. மூடியே கிடக்கும் ஒண்டி வீட்டு கறிக்கடையில் காலியாய்த் தொங்கும் கொக்கிகளைப் பார்த்தபடி, நாக்கின் கடைசி எச்சில் சொட்டும் வரை காத்திருந்த சாம்பல் நிற நாய் அங்கேயே இறந்து போனது. பூட்டிக் கிடக்கும் வீட்டுக் கதவுகளைத் தட்டி, இல்லாத சனங்களை, காற்று மல்லுக்குக் கூப்பிட்டது.

எதிரே இருக்கும் புதர்மண்டிய பாதையை சாமியின் சிவந்த கண்கள் வெறித்துக் கொண்டிருந்தன. அதுதான் ஊரிலிருந்து கோயிலுக்கு வரும் ஒரே ஒற்றையடிப் பாதை. எத்தனையோ கால்தடங்களையும் அதன் நினைவுகளையும் தன்னுள் மறைத்து வைத்திருக்கிறது அந்த பாதை. திருவிழா தினத்தன்று வெளியூரிலிருந்து வரும் சொந்த பந்தங்களின் நான்கு சக்கர வாகனங்கள் இந்த குறுகிய பாதையின் வழியே வர சிரமப்படும். மழைச் சகதிகளில் சிக்கிக் கொள்ளும்.

மழை என்ற வார்த்தை நினைவு வந்ததும் மேற்கூரை இல்லாத கோயிலில் ஆறடி அருவாளைத் தூக்கிப் பிடித்தபடியே சாமி அண்ணாந்து பார்க்க, மேகங்கள் இல்லாத வானம் வெறிச்சோடியிருந்தது.

காலியான ஊருக்கு எதற்கு காவல் சாமி? தண்ணீர் இல்லாத ஊரில் தான் மட்டும் தனியாய் இருந்து என்ன பயன்? மனிதன் செய்த பாவம் ஊரையும் ஊர்காவல் சாமியையும் விட்டு வைக்கவில்லை. தானும் ஊரை விட்டு போய்விடலாம் என்று முடிவெடுத்து, சப்தம் எழுப்பும் தன் கால் சலங்கைகளை கழட்டி எறிந்தது. பீடத்திலிருந்து கீழிறங்கி உற்றுப் பார்க்க, இருட்டின் மயக்கத்தில் ஆள் இல்லாத ஊர் உறங்கிக் கொண்டிருந்தது.

ஊரை விட்டு ஓடப்போகும் தனக்கு எதுக்கு அரிவாள் என்று கையிலிருக்கும் தன் அரிவாளை நிலத்தில் ஓங்கிச் சொருகவும், பிடுங்கி வைக்கப்பட்ட மரத்தைப் போல் அது பூமியில் செங்குத்தாய் முளைத்து நின்றது.

புல் முளைக்காத ஊரில் மேய மறந்த சாமியின் மண் குதிரைகள் மெலிந்த உடலோடு நின்றுக் கொண்டிருந்தன. கடிவாளமற்ற குதிரைகளுக்கு பழகிய மண்ணை விட்டுப் போக விருப்பமில்லை. முரண்டு பிடித்தன. ●

**விஜய ராவணன் <penavummayum@gmail.com>**

# நினைவுச் சுழல்

**இளங்கோ**

**ஓவியம்: ஊக்ரா**

*சுழி - 01*



திங்கள் காலையைக் கடப்பதைப் போல கடினமான பொழுது வாரத்தில் வேறெந்த நாளிலும் வருவதில்லை. இலைதுளிர் காலத்திற்குரிய மழை பொழிந்து கொண்டிருந்ததோடு, எப்பவும் பிடித்தமான சாம்பல் நிறத்தை வானம் போர்த்தியுமிருந்தது. ஒரு அஞ்சலோட்ட வீரனைப் போல முன்னே பாய்ந்து கொண்டிருக்கும் காலத்திடம், எதையோ கொடுத்துவிடும் தவிப்புடன் நின்று நிதானிக்க முடியாது ஓடவேண்டியிருக்கிறது.

வாரவிறுதியில் பின்வளவில் இரைதேடியலைந்த கறுத்த நிற அணிலையும், இரண்டு முயல்களையும் அவதானித்தபடி உன்னோடு பேசிக்கொண்டிருந்தேன். ஒருநாள் தற்செயலாய்க் கரைந்த காகத்தின் ஒலியை மரங்களிடையே தேடித்தேடிப் பதிவு செய்ததைச் சொல்லியபோது, புலூனிக்குஞ்சுகளும் காகங்களும் இணைந்தே குரலெழும்புகின்றவை என எங்கேயோ வாசித்ததையும் நினைவூட்டினாய்.

நெகிழ்வாய் இருக்கும்போதெல்லாம் பனியில் மட்டுமில்லாது மழையிலும் நனைகின்ற மனதுடையவனாக மாறியிருப்பது எனக்கே ஓர் அதிசயந்தான். பின் ‘டெக்’கில் தலைசாய்த்துப் படுத்தபடி மரங்களின்/மலர்களின் வாசனையுடன் நிர்மலமான வானத்தில் அலைந்து திரியும் பறவைகளோடு கூடவே சிறகடிக்கும் மனது எப்போது என்றில்லாவிட்டாலும் அவ்வப்போதாவது வாய்த்துவிடுகிறது. நம்மை நாமே மறக்கின்ற நிலைதான் பித்துநிலையெனில் அது நேசத்திலும் இயற்கையிலும் தோய்ந்துவிடுகின்றபோது மின்னலாய் தெறித்துவிடத்தான் செய்கிறது.

வேலையை விரைவில் விட்டுவிடப்போகின்றேன் எனச் சொன்னேன். அதன் பிறகு என்ன செய்யப்போகின்றேன் என நீ கேட்கவுமில்லை, என்ன செய்யப் போகின்றேன் என்று எனக்குந் தெரியாது.



பதினாறு வயதுவரை போரிலிருந்து மீட்சி கிடைக்குமென நம்பியதேயில்லை. புலம்பெயர்ந்த நாடொன்றுக்கு வரும்வரை இன்னொரு வாழ்வு வாய்க்குமென கனவு கண்டதுமில்லை. இனி வீழ்ச்சியில்லை என நம்பிக்கை துளிர்த்த பொழுதில் தற்கொலையோடும் அறிமுகமாக வேண்டியதாயிற்று. ஆக, அனைத்துமே அதன் அதன் இயல்பில் நடக்கவேண்டிய நேரத்தில் நடக்கும்போது எதைத் திட்டமிடுவது? ஒழுங்குகளின் வழியே கட்டமைப்புக்களின் சட்டங்களில் வழி யிலேதான் வாழ்வு நகர்கின்றது எனச் சொல்பவர்கள் கொடுத்துவைத்தவர்கள். அதிலிருந்து விலகி அல்லது விலக்கப்பட்டு நகரவிரும்புகின்றவர்களும் இவ்வுலகில் இருக்கின்றார்களில்லையா?

ததும்பி வழியும் உன் பிரியத்தை ஏற்றுக்கொள்வதில் என்னளவில் சில தடங்கல்களும், இன்னமும் கழுத்தை விட்டு அகலாது, நானாய் அருந்திக்கொண்ட விசத்தின் இறுதித்துளியும் மிச்சம் இருக்கிறது. நீ பின் தொடரும் மனுசகுமாரன் சிலுவையில் அறையப்பட்ட நாளில் என் தடுமாற்றங்களையும், துயரையும் கூடவே கரைத்துவிட விரும்புகின்றேன் எனச் சொன்னேன்.

நிதானமாய்க் கேட்டபின், “காயப்பட்டவனின் மனசுக்கு...” என்றபடி என்னை இறுக்கவணைத்துச் சிரித்தாய். இந்தளவு இயல்பாய் உன்னைப்போல என்னால் கடந்துபோ

யிருந்திருக்கமுடியாது. ஆகவேதான் அழுக்காறும் அவாவும் உடைய ஆணாக இன்னும் இருக்கின்றேன் போலும்.

தமக்கான சிலுவைகளில் தங்களைத் தாங்களே அறைந்து கொண்ட எத்தனையோ பேரின் பாவங்களை இரட்சிக்கும்பொருட்டு மனுசகுமாரன் மீண்டும் மீண்டும் உயிர்த்த ஞாயிறுகளில் எவரினூடாகவோ தோன்றியபடியிருக்கின்றார்.

என் 'பாடு'களைத் தாங்கியபடி என்னைச் சிலுவையை விட்டு இறக்குபவள் - நீ.

சுழி - 02

தெரிவுகளின்றி ஒருபோதும் வாழ்வு நகர்வதில்லை எனினும் ஏன் தேர்வுகளின்போது எதையோ விலத்திவர வேண்டியிருக்கிறது. எதற்காக எவரையோ காயப்படுத்த வேண்டியிருக்கின்றது. காலம் விந்தைகளை மட்டுமில்லை இவ்வாறான பொழுதுகளில் கடுமையான நெருக்கடிகளையும் மனிதர்க்கு ஏற்படுத்திவிடுகின்றது.

ஒருபூங்காவிற்கும் இன்னொருபூங்காவிற்கும் இடையிலிருக்கும் மூன்று கிலோமீற்றர்கள் இடைவெளியில் அடிக்கடி நடந்துபோவதுண்டு. அவ்வப்போது சைக்கிளில் பறப்பதுமுண்டு. எப்போதும் சலசலத்தபடி நகர்ந்துகொண்டிருக்கும் சிற்றாறு மழைபெய்யும்போது பெருகிப்பாய்வதையும், நெடிதுயர்ந்த மரங்களின் பெரும் மௌனத்தையும், நெருக்கமாய் இருக்கும் காதலர்களின் குறுகுறுப்புக்களையும், அவ்வப்போது குறுக்காய்ப் பாயும் முயல்களையும் பார்த்தபடிப் போகும் உலாத்தலின்போது ஒருவர் அறிமுகமானார்.

சிலரோடான உறவுகள் அறிமுகங்களோடு முடிந்துவிடுவதுண்டு. இவரோடு நிறையக் கதைக்கலாம் போல அப்படியொரு வாஞ்சையான முகத்தோடு இருந்தார். உலாத்தியபடியோ அல்லது உட்கார்ந்தோ கதைகள் பல பின்னர் பேசியதுண்டு.

ஒருநாள் நாங்கள் மனதின் ஆழங்களுக்குள் சொற்களால் இறங்கிக்கொண்டிருந்தபோது, தான் தற்சமயம் இரு பெண்களை நேசித்துக்கொண்டிருப்பதாய்ச் சொன்னார். சாத்தியமா அல்லது சமாளிக்கமுடியுமா என்று நான் கேட்கவில்லை. அவரவர் அவர்க்கான அறத்தை எழுதிக்கொள்வதில் தவறேதுமில்லை.

'ஒருத்தி நீ எப்படியென்றாலும் இரு, நான் எப்போதும் நேசிப்பேன்' எனச் சொன்னதாய்ச் சொன்னார். இன்னொருத்தி 'நீ என்னைத்தான் எப்போதும் நினைத்துக்கொள்ளவேண்டும்' என அடிக்கடி அதட்டிக்கொண்டிருப்பாள் என்றார்.

இரண்டு பேரையும் தனக்கு நன்கு பிடிக்கும். தன் தெரிவுகளின் நிமித்தம் யாரையும் காயப்படுத்த தனக்கு விருப்பமில்லை என்றார். ஒரு காதல் முடிந்துதான் இன்னொருகாதல் வரவேண்டும் என்பது நியதியா? ஒரே நேரத்தில் பல காதல்கள் இருக்கக்கூடாதா என்ன? எவரும் நியாயம் கேட்டு வராதவரைக்கும், நாம் நீதிபதிகளாய் முகமூடிகள் அணியவும் முடியாது.

பனிக்காலத்தில் ஒருநாள் நோய்மை பீடித்திருந்தபொழுதில் குளிரை நேரடியாகச் சந்திப்பதே வீரமென எண்ணி இந்த பூங்காக்களுக்கிடையில் மூசிமூசி நடந்தபடியிருந்தேன். தற்செயலாக அதே நண்பர் நாயுடன் நடந்து வந்துகொண்டிருந்தார். என்னைப் போலவே இந்தக்குளிருக்குள்ளும் நடக்க வேறு சில பைத்தியங்களும் இருப்பதையிட்டு சிரிப்பு வந்தது, அடக்கிக்கொண்டேன்.

'எப்படி உங்கள் காதலிகள் இருக்கின்றனர்?' என்றேன். நமக்குத்தான் பெண்களும் புத்தகங்களும் இல்லாது வேறு உலகம் உருளாதே.

'எனக்கு இப்போது ஒரு புதுக்காதலி கிடைத்துவிட்டார்' என்றார்.

என்னது இவர் மூன்றாவதாக இன்னொருவரையும் சமாந்தரமாக நேசிக்கத்தொடங்கிவிட்டாரோ என்று யோசித்தேன். அவரே தொடர்ந்தார்.

'இவளைக் கண்டவுடன் மற்ற இருவருக்கும் விடைகொடுத்துவிட்டேன்' என்றார்.

எனக்குச் சற்று அதிசயமாக இருந்தது. தேர்வுகளில் நம்பிக்கை இல்லை என்றவர் .எப்படி இது சாத்தியமென 'ஏன்?' எனக் கேட்டேன்.

'இல்லை. இவளும் இவளின் நான்கு நான்குவயது மகளும் என்னை அப்படிக் கவர்ந்திழுக்கின்றனர். இந்த நேசம் மற்ற எல்லாவற்றையும் எளிதில் விலத்திவைத்துவிட்டது' என்றார்.

'மகளுள்ள பெண்ணை நேசித்தால் உலகில் மாபெரும் தியாகம் செய்ததாய் நினைத்துவிட்டீர்கள் போலும்' என அவரைச் சீண்டினேன்.

'அப்படியேதுமில்லை' என்றார் சற்று தீர்க்கமான குரலில்

'அது சரி எப்படி உங்களின் மற்றக் காதலிகளுக்கு இதைத் தெரியப்படுத்தினீர்கள்'

'தெரிவுகள் எப்போதும் கடுமையானதுதான். யாரையோ காயப்படுத்தத்தான் வேண்டியிருக்கின்றது. ஆனால் நான் எதையும் சொல்லாமல் அவர்களுக்கு உணர்த்தியது ஒன்றே ஒன்றுதான்'

'என்னது?'

'நாளை அவர்களுக்கும் குழந்தைகள் பிறந்து, அவர்களுக்குப் பிரியமான துணைகளைச் சடுதியாய்ப் பிரிந்துபோக நேரிடலாம். அப்படி நிகழ்ந்தாலும் அவர்களையும், அவர்களின்

குழந்தைகளையும் அளவற்று நேசிக்கவும் என்னைப் போல நிறையப்பேர் இந்த உலகில் இருப்பார்கள் என்பதை மட்டும்' என்றார்.

ஒருவகையில் பார்த்தால் அவரின் இரண்டு காதலிகளுக்கும் இதைவிட மிகச்சிறந்த நம்பிக்கையை அவரால் கொடுத்திருக்கமுடிந்திருக்காது போலவும் எனக்குத் தோன்றிற்று.

சுழி - 03

'நினைவில் காடுள்ள மிருகத்தை எளிதில் பழக்க



முடியாது' என்பதுபோல இரண்டாண்டுகளுக்கு மேலாக தன் வாழ்வை தானே தீர்மானித்து, விரும்பியபோது அலைந்தும் திரிந்தவனுக்கு ஒரு அலுவலகத்தில் உட்கார்ந்திருப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. வேலையில் மட்டுமல்ல, உறவுகளுக்காய், அவர்களின் பிரியங்களுக்காய் ஓரிடத்தில் தன்னை நிலை நிறுத்திக்கொள்வது கூட கடினமானதுதான்.

நீ வேலைகூட செய்யத்தேவையில்லை என்னோடு எப்போதும் இருந்தாலே போதும், உனக்கான எல்லாவற்றையும் நானே செய்து தருகின்றேன் என்றவளின் நேசத்தைக் கூட இந்த நாடோடியாக அலைகின்ற பெருங்கனவுக்கு முன் விலத்திவிட்டே அவனுக்கு வரவேண்டியிருந்தது. உண்மையிலே இந்தக் கனவு அவனுக்குள் எதனாலும் அணையமுடியாது மூசி எரிகிறதா இல்லை அதை வைத்துப் பாவனைகளைத்தான் செய்கின்றேனோ என அவனுக்குப் பிரியங்களை இழக்கின்ற ஒவ்வொருபொழுதும் தோன்றியிருக்கின்றது.

ஒரு பொழுது அவனின் நாடோடித்தடங்களைப் பின்பற்றியபடி ஒருத்தி வந்தாள். தனக்கு இது வலிகளை ஆற்றுப்படுத்தும் காலம், காதலிப்பதற்கான மனோநிலை இல்லை என்றான் அவன். நான் உன்னிடம் சம்மதங்கேட்டு நேசத்தை யாசிக்கப்போவதில்லை. உன்னை என்றென்றும் என் நித்திய காதலனாக ஆக்கிக்கொள்ளப் போகின்றேன் என்றாள். இவனுக்குத் தமிழ்ச்சூழலில் 'நித்திய காதலர்களின்' தீராத விளையாட்டுக்கள் தெரியும் என்பதால், நித்திய காதலனா என்றொரு எள்ளல் உதடுகளில் எட்டிப்பார்த்தது.

பிறகான காலங்களில் "நீ யாரையும் நேசிக்கலாம், எனக்கு அதைச் சொல்லக்கூடத் தேவையில்லை. ஆனால் எப்போதும் உன்னை நேசித்துக்கொண்டிருப்பேன்" என்றாள். ஏன் இவ்வளவு பைத்தியக்காரியாக இருக்கின்றாள் என்பதைவிட இப்படியும் ஒருத்தி காதலிக்கமுடியுமா என்பதில் அவனுக்கு வியப்பு வந்தது.

உனக்கு நான் நித்திய காதலனாக இருந்தால், என் வாழ்நாளில் இனி நான் என்றென்றைக்கும் காதல் இல்லாது இருக்கும் காலம் வரவே வராது என நகைச்சுவையாகச் சொன்னான் அவன்.

ஒருமுறை அவன் 'நான் வேலையை விடுத்து சும்மா என் வாழ்வை வேடிக்கை பார்த்தபடி இருக்கின்றேன்' என்று சொன்னதற்காகவே ஒரு காதல் அவனைத்தேடி வந்தது. பின்னர் இன்னொருமுறை, 'நான் பயணம் செய்வதற்காக வேலை செய்துகொண்டிருக்கின்றேன்' என்று சொன்னதற்காய் வேறொரு நேசம் வந்தது.

எதெதெற்காக எல்லாம் பெண்களுக்கு இன்னொருவர் மீது பிரியம் வருகின்றதென நினைக்க இவனுக்குஇன்னும்குழப்பமாகஇருந்தது. எவராயினும் அவர் இயல்பில், அதிகம் நாடகீயத்தன்மை இல்லாது இருந்தால் அவர்களை நேசிப்பதற்கு மனிதர்கள் வருவார்கள் போலுமென நினைத்துக்கொள்வதை விட வேறு பதில்களே இல்லைப்போலும்.

கடக்கக் கடினமான பனிக்காலத்தைக் கடந்த அவன் இந்த வருடத்தில் எவரையும் நேசிப்பதில்லை என முடிவு செய்திருந்தான். எவரையும் நேசிப்பதில்லை என்பதன் மறுபுறத்தில்தானே எல்லோரையும் நேசிக்கலாமென்கின்ற இன்னொரு பக்கமும் மறைந்திருக்கின்றது.

வசந்தகாலம் போல அதன் இயல்பில் மலர்வது நேசம் என்க.

மேலும், "நினைவில் அவனுக்கு இன்னமும் காடுகள் உள்ளன." ●

**இளங்கோ <elanko@rogers.com>**

# பின்நகர்ந்த காலம்

**வண்ணநிலவன்**

தி.நகர், 9 மகாலெட்சுமி தெருவிலிருந்து வெளிவந்த 'பிரக்ஞை' பத்திரிகையை சேர்ந்த ரவிசங்கரை சந்திப்பதற்கு சென்றிருந்தேன். படிப்பதற்கு ஏதாவது புத்தகம் இரவல் வாங்கலாம் என்றுதான் போனேன். அவரிடமும் க்ரியா ராமகிருஷ்ணனிடமும் எப்போதும் ஏதாவது புதிய ஆங்கில நூல்கள் இருந்துகொண்டே இருக்கும். அவற்றை வாங்கிச்சென்று படித்துவிட்டு ஞாபகமாகத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். இதற்காகத்தான் அன்றும் ரவிசங்கரைப் பார்க்க தி.நகருக்குப் போனேன்.

பேசிக்கொண்டிருக்கும்போது, 'அடுத்த வாரத் திலிருந்து ஒருத்தர் மார்க்சிய வகுப்புகளெடுக்க வருகிறார். நீங்களும் வாருங்களேன்' என்றார். ஏற்கெனவே, அந்தகால மவுண்ட் ரோட்டிலிருந்த நியூ செஞ்சுரி புக்ஹவுஸில் ஏகப்பட்ட ரஷ்ய இலக்கியங்களை வாங்கி வீட்டில் குவித்திருந்தேன். அதுபோல் 'கூலி - விலை - லாபம்', 'மார்க்சிய இயங்கியல்', எங்கல்சின் 'டூரிங்கிற்கு மறுப்பு', 'கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை', 'குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்', 'வரலாற்றுப் பொருள்முதல் வாதம்' என்று ஏராளமான மார்க்சிய நூல்களையும் சல்லிசான விலையில் கிடைக்கிறதென்று வாங்கிப்போட்டிருந்தேன்.



பொதுவாகக் கடினமான தத்துவங்களும் சிந்தனைகளும் எனக்கு உவப்பானவை. அவற்றைப் படித்து மனம் குதூகலிக்கும். ஏற்கெனவே, எஸ்.வி. ராஜதுரை எழுதிய 'அந்நியமாதல்' படித்துவிட்டு மதிமயங்கிப் போய் கிடந்தவனுக்கு, மார்க்சிய வகுப்புகள் ஆரம்பிக்கிறார்கள் என்றதும் போதை தலைக்கேறிவிட்டது. அப்போது 'ஆனந்த விகடன்' பத்திரிகையில் வேலை பார்த்த 'லயனல்' என்ற லயனல் அந்தோனிராஜையும் மார்க்சிய வகுப்புக்கு அழைத்துச் சென்றேன்.

9 மகாலெட்சுமி தெருவில் அந்த மார்க்சிய வகுப்புகள் தினசரி மாலையில் நடந்தன. கண்ணன் என்பவர் ஜோல்னாப்பையுடன் வந்து வகுப்பெடுத்தார். அந்த வகுப்பில் நான், லயனல், ரவிசங்கர், 'வீராச்சாமி' என்ற ரங்கராஜன், பா. செயப்பிரகாசம், பூமணி, ரகுராமன் எல்லாம் கலந்துகொண்டோம். இரண்டு வாரங்கள் அந்த வகுப்புகள் நடந்தன. இதுபோன்ற வகுப்புகள் சென்னையில் பல நடந்திருக்கும் போல.

1970களில் மார்க்சியத்துக்கு டிமாண்ட் ஜாஸ்தி. எஸ்.வி. ராஜதுரை, கோவை ஞானி, கோவை ஈஸ்வரன், எஸ்.என். நாகராஜன் போன்ற கட்சி சாராத தீவிர மார்க்சிய பிரமுகர்களெல்லாம் உருவான காலம் அது. கட்சி சார்புடைய 'தாமரை', 'செம்மலர்' போன்ற இடதுசாரிப் பத்திரிகைகள் தவிர 'மனிதன்' (கோவை ஈஸ்வரன் நடத்தியது), 'விடியல்', 'உதயம்', 'வானம்பாடி' என்று ஏராளமான இடதுசாரி - மார்க்சிய சார்புள்ள பத்திரிகைகளும் வெளிவந்த நாட்கள்.

தி.நகரில் நடந்த மார்க்சிய வகுப்பின் முடிவாக 'மக்கள் கலை இலக்கியக் கழகம்' ஆரம்பிக்கப்பட்டது. அதன் சார்பில் 'புதிய ஜனநாயகம்' என்ற பத்திரிகையையும் வெளியிடுவதென்று முடிவானது. கூட்டத்தோடு கோவிந்தா போடுவதில் எனக்குப் பழக்கமில்லை. அதனால், மகஇக இத்யாதிகளில் ஈடுபாடு காட்டவில்லை. பா. செயப்பிரகாசம், பூமணி போன்றவர்களெல்லாம் 'மனஓசை' என்ற இன்னொரு மார்க்சிய இதழில் எழுதினர். (இது 'புதிய ஜனநாயகம்' பத்திரிகைக்கு போட்டியாகத் துவக்கப்பட்டது)

நான் எந்த இடதுசாரிப் பத்திரிகையிலும் எழுதவில்லை. தி.க.சி.யின் நட்பினால் 'தாமரை'யில் மூன்று சிறுகதைகள் எழுதியதோடு சரி. இளவேனில் நடத்திய 'கார்க்கி'என்ற பத்திரிகையில் நம்பிராஜன்கூட எழுதியது நினைவுக்கு வருகிறது. ஆனால், எனக்கு ஆரம்பம் முதலே இடதுசாரித்தனத்தின் கட்டுப்பெட்டித்தனம் ஒத்துவரவில்லை. 'தீபம்', 'கணையாழி', 'கசடதபற', 'நடை', 'எழுத்து' பத்திரிகைகள் கவர்ந்த அளவுக்கு இடதுசாரிப் பத்திரிகைகள் என்னைக் கவரவில்லை. எனக்குப் பிடித்த ஒரே இடதுசாரி எழுத்தாளர் 'அஸ்வகோஷ்' என்ற பெயரில் எழுதிய ஆர். ராசேந்திரசோழன்தான். கு. சின்னப்பபாரதியையும் இலங்கையின் கே. டேனியலையும் கொண்டாடுவார்கள். எனக்கு சின்னப்பபாரதி, டேனியனில் நாவல்களைவிட டி. செல்வராஜின் 'மலரும் சருகும்', 'தேநீர்' நாவல்கள்தான் மனதுக்கு நெருக்கமாக இருந்தன. கே. டேனியலை விட டொமினிக் ஜீவா நன்றாக எழுதுகிறார் என்று தோன்றியது.

மவுண்ட் ரோட்டில் 'ஆனந்த விகடன்' வளாகத் திலிருந்துவந்த 'துக்ளக்' அலுவலகம் நுங்கம்பாக்கம் ஆண்டர்ஸன் ரோட்டுக்கு மாற்றப்பட்டது. அப்போது ஆசிரியர் 'சோ' தனக்கு வந்த சினிமா வாய்ப்புகளை எல்லாம் பெரும்பாலும் தவிர்த்தே வந்தார். சினிமாவில் காமெடியனாக நடித்து அவருக்கு அலுத்துவிட்டது. நாடகமும் பத்திரிகையும் போதும் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். அதனால் மவுண்ட் ரோடு அலுவலகத்திற்கு வந்து கொண்டிருந்த அவரது சினிமாவுலக நண்பர்களான கேமராமேன் பாபு, சம்பத், இயக்குநர் எஸ்.பி. முத்துராமன் போன்றோரெல்லாம்



ஹரிஹரன்



டோமனிக் ஜீவா

ஆண்டர்ஸன் ரோட்டுக்கு அலுவலகம் மாறிய பின்னர் வருவதைக் குறைத்துக் கொண்டுவிட்டனர்.

இதனிடையே, ஜோதிப் பிரகாசம் என்பவர் 'வாழ்க்கைக் கேள்விகள்' என்ற புத்தகத்தை எனக்கு அனுப்பி வைத்தார். அவர் யார், அவருக்கு எப்படி என்னுடைய முகவரி தெரிந்தது என்று தெரியவில்லை. இன்னொரு நாள் 'அல்பேனியக் கம்யூனிஸ்ட்' என்று சொல்லிக்கொண்டு ஒருவர் என்னைப் பார்க்க வந்தார். அன்வர் ஹோக்ஸாவின் புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். கிறிஸ்தவர்கள் தங்கள் மதத்தில் சேருவதற்கு ஆட்களை பிடிப்பது போலிருந்தது. மார்க்சியமும் இன்னொரு மதம்தானே? அது மார்க்ஸைக் கடவுளாகக் கொண்ட மதம். ஏங்கல்ஸ், லெனின், ஸ்டாலின், மாஸேதுங் எல்லாம் அதன் பரிவார தேவதைகள்.

ஆண்டர்ஸன் ரோடு அலுவலகத்திற்கு ஒருநாள் சினிமா இயக்குநர் ஹரிஹரன் வந்தார். அவர் சுற்றுச்சூழல் மாசை அடிப்படையாகக் கொண்டு ஒரு படத்தை இயக்கவிருப்பதாகவும், அதற்கு நான் திரைக்கதை வசனம் எழுத வேண்டும் என்றும் சொன்னார். படத்தின் தயாரிப்பாளர் பாளை சண்முகம் என்றார். பாளை சண்முகம் திருநெல்வேலியில் ஒரு பிரபலமான கிரிமினல் லாயர். சி.பி.ஐ. கட்சிப் பிரமுகர். "அவர்தானா நீங்கள் சொல்லுகிற பாளை சண்முகம்" என்று ஹரிஹரனிடம் கேட்டேன். "ஆமாம் அவரேதான்" என்றார்.

"சிறுகதை, நாவல் எழுதிப் பழக்கமே தவிர சினிமாவுக்கான கதை எழுதிப் பழக்கமில்லை. வேண்டுமானால் வசனம் மட்டும் எழுதுகிறேன்" என்று சொன்னேன். "சண்முகத்திடம் கேட்டுவிட்டுச் சொல்கிறேன்" என்றார் ஹரிஹரன். அப்போது செல்போனெல்லாம் கிடையாது.

ஹரிஹரன் ஏற்கெனவே என்.எஃப்.டி.சி.க்காக 'வான்டட் தங்கராஜ்' என்ற குழந்தைகளுக்கான திரைப்படத்தை இயக்கியிருந்தார். அதன் திரைக்கதை - வசனத்தை எழுதியிருந்தவர் எழுத்தாளர் அம்பை. ஹரிஹரன் பூனா ஃபிலிம் இன்ஸ்டிட்யூட்டில் படித்தவர். உலகத் திரைப்படங்களைப் பற்றிய தகவல்கள் அவர் விரல் நுனியில் இருந்தது.

பின்னர் பாளை சண்முகம் தயாரித்த அந்தப் படத்திற்கான கதை, வசனத்தை அவர்களே எழுதிக் கொண்டார்கள். ரகுவரன் கதாநாயகனாக நடித்த அந்தப் படம்தான் 'ஏழாவது மனிதன்.' இதற்குச் சிறிது காலத்திற்கு முன்பு ஜெயபாரதியின் இயக்கத்தில் சி.பி.எம். கட்சித் தோழர்கள் சிலர் கூட்டாகச் சேர்ந்து டி. செல்வராஜின் 'தேநீர்' என்ற நாவலைப் படமாக்க விரும்பினர். ஜெயபாரதி அதற்கு வசனம் எழுத என்னை அழைத்தார். எனக்கு எழுதத் தோன்றவில்லை. 'தேநீர்' கதையை 'ஊமை ஜனங்கள்' என்ற பெயரில் படமாக்கினார்கள். அதில் கதாநாயகியாக நடித்தவரைத்தான் பின்னர் ஜெயபாரதி திருமணம் செய்துகொண்டார். ஜெயபாரதியைப் போல் அவர் மனைவியும் ரொம்ப அமைதியானவர்.

**1980**வாக்கில் சென்னையில் பி.யூ.சி.எல். என்ற அமைப்பை சென்னை வக்கீல்கள் சிலர் சேர்ந்து துவக்கினர். அப்போது ஜோலார்பேட்டை, திருப்பத்தூர் போன்ற ஊர்களில் நக்ஸலைட்களின் நடமாட்டம் அதிகமிருந்தது. சீராளன் என்ற நக்ஸலைட் போலீஸாரால் சுட்டுக் கொல்லப்பட்டார். திருப்பத்தூரிலும் ஒரு நக்ஸலைட் பிடிபட்டார். நக்ஸ்லைட்களைப் பிடிப்பதில் போலீஸ் அதிகாரி வால்டர் தேவாரம் மும்முரமாக இருந்தார்.

திருப்பத்தூரில் எழுத்தாளர் பா. செயப்பிரகாசத்தின் மனைவியுடைய அண்ணனான பக்தவத்சலம் பிரபலமான வக்கீலாக இருந்தார். அவர் நக்ஸலைட்டுகளுக்காக வாதாடினார். அதுபோன்ற சூழலில்தான் சென்னையில் பி.யூ.சி.எல். ஆரம்பிக்கப்பட்டது. அதற்குத் தலைவராக 'சோ'வை நியமித்தனர். அதாவது, 'சோ'வை வலுக்கட்டாயமாகத் தலைவராக்கினர். 1980களின் ஆரம்ப வருடங்களில் இந்தியாவில் பல ஊர்களில் பி.யூ.சி.எல். தொடங்கப்பட்டது. இதன் அகில இந்தியத் தலைவராக ஓய்வுபெற்ற நீதிபதி தார்குண்டே இருந்தார்.

சென்னையில் அடிக்கடி திருபத்தூர் வக்கீல்

பக்தவத்சலம் பத்திரிகையாளர்களைச் சந்தித்து, போலீஸாரின் அடக்குமுறைகளைப் பற்றிக் கூறினார். சென்னைக் கிளையில் இரா.செழியன், எஸ்.வி. ராஜதுரை போன்றோரெல்லாம் செயல்பட்டனர். கோவாவிலிருந்து கிளாட் ஆல்வாரிஸ் என்பவர் வந்து பி.யூ.சி.எல். கூட்டங்களில் பேசினார். 'சோ' பி.யூ.சி.எல். கொள்கைகள், நடவடிக்கைகளைப் பிடிக்காமலேயே அதிருப்தியுடனே அதில் தொடர்ந்தார். 'நான் தலைவர் பதவியிலிருந்து விலகிக்கொள்கிறேன்' என்று அமைப்பில், மும்முரமாக இருந்த அட்வகேட் சங்கரனிடம் சொல்லிக்கொண்டே இருந்தார். கடைசியில் எப்படியோ பி.யூ.சி.எல்.லிலிருந்து சோ வெளியேறினார்.

போலீஸாரைக் கண்ணை மூடிக்கொண்டு எதிர்க்கும் பி.யூ.சி.எல்.லின் போக்கு 'சோ'வுக்கு அறவே பிடிக்கவில்லை. அந்தச் சமயத்தில் ஆந்திராவிலும் நக்ஸலைட்கள் வளர்ந்து வந்தனர். ஆந்திர பி.யூ.சி.எல்.இன் தலைவராக வக்கீல் கண்ணபிரான் இருந்தார். கண்ணபிரான் சென்னைக் கூட்டங்களில்கூடக் கலந்துகொண்டார். அந்தச் சமயத்தில் ஆந்திரம், தமிழகம், கேரளத்தில் நக்ஸலைட் பிரச்சினை பெரிதாக வளர்ந்தது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை இப்போது நக்ஸலைட்கள் விவகாரம் அனேகமாக ஓய்ந்து போய்விட்டது. அதனால், பி.யூ.சி.எல்.லும் இருக்கிற இடம் தெரியவில்லை.

தவிர இப்போது அரசே மனித உரிமைகள் குறித்து சட்டமியற்றி, அதற்காக தனி ஆணயத்தை அமைத்துள்ளது. அதனால், பி.யூ.சி.எல். மங்கித் தேய்ந்துவிட்டது. ●

**வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>**

# தேசியம் என்னும் கோரமுகம்

**மார்டின் பட்லர்   தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்**

போர்ச்சுகீசிய நாட்டில் வசிக்கும் மார்டின் பட்லர், சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த ரஷ்ய மெய்ஞானியான குர்ட்ஜிப் அவர்களின் நேரடி மாணவியான ரீனா ஹேண்ட்சின் உதவியுடன், ஆன்மப் பயிற்சிகளில் பல்லாண்டு காலம் ஈடுபட்டவர். மனித நிலைமைகள் பற்றிய ஆழமான புரிதலுக்கு இவர் வருவதற்கு ஸ்பினோஷா போன்ற தத்துவவாதிகளையும் முறையாகக் கற்றிருக்கிறார். என் காலத்தையும் என்னைச் சுற்றியுள்ள நிலைமைகளையும் புரிந்துகொள்வதற்கும் இந்தச் சூழ்நிலைகளுக்குள் எனது விழைவுகள், ஆசைகள், வலிகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொள்வதற்கும், எனக்கு வழங்கப்பட்டுள்ள வளங்களினூடாக நிறைவாகவும் நீதியாகவும் இருப்பதற்கும், மார்டின் பட்லரின் எழுத்துகள் உதவிகரமாக இருக்கின்றன. மார்டின் பட்லர் என்னிடம் ஏற்படுத்திய பயன்விளைவை இன்னும் சில வாசகர்களும் அடையலாம் என்ற நம்பிக்கையில், எனக்குப் பிடித்தவற்றை மொழிபெயர்க்கிறேன்.

ஆற்றல் நீக்கம் செய்யப்பட்டவர்கள் அபாயகரமான மக்களாவர். தன்னுணர்வு கொண்ட எல்லா உயிர்களும் அதிகாரத்துக்காக ஏங்குபவை - மந்தையில் ஆதிக்கம் செலுத்துவற்கும், உயிர்த்திருக்கும் வாய்ப்புகளை அதிகப்படுத்துவதற்கும், குழந்தைகளுக்கு அதிகாரத்தைப் பரிமாறுவதற்கும். மக்களைப் பாதிக்கும் பொருளாதார ரீதியான துயரம் பிறப்பித்த ஒருவர்தான் ஹிட்லர் என்பதை, முதல் உலகப்போர் முடிந்து ஒரு தசாப்தத்துக்குப் பின்னரான ஜெர்மனியைப் பார்த்து, நான் மேற்சொன்னதைப் பரிசீலிக்க வேண்டும்.

ஜெர்மனி அனைத்து நிலைகளிலும் குதறப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் ஹிட்லர் பரிபூர்ணத் தீர்வுடன் வந்தார். பிற இன, மதக் குழுக்கள்தான் அத்தனைப் பிரச்சினைகளுக்கும் அடிப்படையென்று குற்றம்சாட்டினார். அது வேலை செய்தது. அது எப்போதுமே வேலை செய்யக்கூடியதும்கூட. பொதுமக்கள் திரள் எவ்வளவோ சாந்தம் கொண்டதாக இருந்தாலும், ஆற்றல் அகற்றப்பட்டவர்களாக அவர்கள் தங்களை உணரும் பட்சத்தில், பிறரின் மீது குற்றம் சுமத்துபவரை ஆதரிக்கவே செய்யும். அதன் பின்விளைவாக வதைமுகாம்கள் உருவாகவே செய்யும். பொதுமக்கள் தங்களை, வெல்ல முடியாதவர்கள் என்று உணரவைத்து, தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுபான்மையினரை ஒட்டுமொத்த ஒதுக்குதலுக்கு உள்ளாக்க வைப்பதிலும், பொது உணர்வுகளை மதியூகத்துடன் கையாள்வதிலும் ஹிட்லர் நிபுணர்.

கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு, அதே விசைகள் தொழில்படுவதைப் பார்க்கிறோம். தேசியவாதம் எழுந்துகொண்டிருக்கும் போதே, கோடிக்கணக்கான மக்களின் வளமும் கௌரவமும் மங்கிக் கொண்டிருக்கிறது. திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டியதில்லை; செல்வமும் அதிகாரமும் மிகச் சில மக்களிடம் குவிந்துகொண்டிருக்கும் நிலையில் வெகுமக்கள் திரள் தங்களை ஏதுமற்றவர்களாக உணர்கிறார்கள்.

சக்தியற்ற இந்த உணர்வுநிலை, செல்வம், புகழ், அதிகார பலம் கொண்ட பிரபலங்களின் வாழ்வைப் பார்த்து மேலும் தூண்டப்படுகிறது. பெரும்பான்மை மக்கள் எதை விரும்புகிறார்களோ அதைத்தான் ஒரு பிரபலம் வெளிக்காட்டுகிறார். அந்தச் சூழ்நிலையில் அதை அடையும் வசதிகள் இல்லாத மக்களிடம் அது நிராசையை உருவாக்குகிறது. ஆனால், அந்த நிராசையும் கோபமும் பிரபலத்தின் மீது பாயாமல், அவர்களது சீரழிவுக்குக் காரணகர்த்தாக்களாக ஆட்சியதிகாரம் செலுத்துபவர்களால் கைகாட்டப்படுபவர்கள் மீது பாய்கிறது. இப்படித்தான் அகதிகள், வேலையில்லாதவர்கள், நோயாளிகள், மத, இனச் சிறுபான்மையினர் பொதுமக்களுக்கு எதிரிகளாக ஆக்கப்படுகின்றனர்.

நீண்டகாலமாகப் பின்னடைவில் இருந்துவந்த தேசமான இங்கிலாந்தில் இது பட்டவர்த்தனமாகியுள்ளது. 1900ஆவது ஆண்டில் ஒரு பவுண்ட் ஸ்டெர்லிங்கை ஐந்து டாலர்களுக்குப் பரிமாற்ற முடியும். இன்றைக்குப் பரிமாற்ற நிலைமையோ மிகவும் மோசம். தொழில்துறை உற்பத்தியிலும், உள்கட்டுமானத்தை சுயமாக உருவாக்கும் வழிவகைகளிலும் 11ஆவது இடத்தில் தற்போது உள்ளது. அணு ஆற்றல் உற்பத்தி நிலையங்கள், தொலைத்தொடர்பு உட்கட்டுமானம் ஆகியவற்றுக்கு வெளிநாடுகளைத்தான் நம்பவேண்டியிருக்கிறது.

சுருக்கமாகக் கூறப்போனால், வலதுசாரி ஊடகங்களின் 30 ஆண்டுகாலப் பிரசாரத்துக்குப் பின்னர் இங்கிலாந்து மக்கள் தங்கள் அதிகாரத்தை உறுதிசெய்வதற்கு, அந்நாடு ஐரோப்பிய யூனியனிலிருந்து விலகத் தீர்மானித்தது. ஐரோப்பிய நாடுகள் ஒன்றுக்கொன்று போரிடத் துணிந்த நிலையில்தான் வின்ஸ்டன் சர்ச்சிலால் முன்னெடுக்கப்பட்டு ஐரோப்பா ஒன்றிணைக்கப்பட்டதை நினைவில் கொள்ள வேண்டும்.

இங்கிலாந்து சந்திக்கும் சூழ்நிலையைத்தான் அமெரிக்காவும் அனுபவித்துக் கொண்டிருக்கிறது. சீனா, இந்தியா, இந்தோனேசியா மற்றும் பிற நாடுகள் மேம்பட்ட தொழில்நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டு வல்லரசாக உயர்ந்து கொண்டிருக்கின்றன. தொழில்நுட்ப புதுமைநாடல் மட்டுமே செல்வத்தை உற்பத்தி செய்ய முடியும் என்பதை நினைவுகூர்க. ஒரு தேசம் தனது பொறியாளர்களுக்கும் அறிவியலாளர்களுக்கும் நிறைய ஊதியமும் அங்கீகாரமும் அளிக்காவிட்டால் சீரழிவு என்பது தவிர்க்க முடியாதது.

இதெல்லாம் சேர்ந்து தேசியவாதமும் மீண்டும் தனது கோர முகத்தை வெளிக்காட்டிக் கொண்டிருக்கும் நிலையில் உலகம் மேலும் மேலும் நிலையற்றதாக மாறிக் கொண்டிருக்கிறது. வெகுமக்கள் ஆற்றலற்றவர்களாகமாறியிருப்பதற்கான உண்மையான காரணம் துலக்கப்படவேயில்லை. மிகச் சில நபர்களால் சுரண்டப்பட்டு கையாளப்படுவதால் ஏற்பட்டிருக்கும் நிலை அது. அதற்கு மாறாக உலகில் வாழும் எண்ணற்ற சிறுபான்மையினர் இந்தச் சுமையைச் சுமக்க வேண்டியிருக்கிறது. இந்தச் சக்கரம் சுற்றித் திரும்ப அதே இடத்துக்கு வந்து நிற்கிறது. தேசியவாதக் கூச்சல் மற்றும் வெறியில் எல்லாம் மறந்துபோகிறது. ●

**ஷங்கர்ராமசுப்பிரமணியன்** <shankarashankara@gmail.com>